"கற்றோர்க டாமுகப்பர் கல்விதனி லாசையுள்ளோர்
பெற்றோ மெனவுகந்து பின்புகற்பர் — மற்றோர்கள்
மாச்சரியத் தாலிகழில் வந்ததென்னெஞ் சேயிகழ்கை
யாச்சரிய மோதா னவர்க்கு."

# விவேக சிந்தாமணி.

அறிவைப் பரவச்செய்வதற்கான மாதாந்தரத் தமிழ்ப் பத்திரிகை.

புத்தகம். 1. 1892வரு மேமீ. இலக்கம். 1.

## அறிவு இன்றியமையாத தென்பது.

திருக்குறள்.

"அறிவுடையா ரெல்லா முடையா ரறிவிலா
ரென்னுடைய ரேனு மிலர்"

ஒருவன் என்று பிறந்தானோ அன்றுமுதலாகவே அறிவைச் சம்பாதிக்கத்தொடங்கி அதை நாள்தோறும் பெருக்கிக்கொண்டேவரும் இயல்பினனா யிருக்கிறானென்பதை யாவரும் எளிதில் உணர்வார்கள்.

இருப்பிடம்விட்டுப் பெயரவறியாத இளங்குழந்தை இருந்து, தவழ்ந்து விளையாடி, நிற்க நடக்கக்கற்றுத், தாய்தந்தையர் இன்னாரென்றும், நீர் இன்னது நெருப்பு இன்னதென்றும் பகுத்தறியுமுன் படும் துன்பங்களையும், அத்துன்பங்களுக்குப் பின்னிடாமல் அக்குழந்தை அவற்றை மேற்கொண்டு கடந்துசெல்லச் செல்ல, அழகமைந்து ஊக்கமுற்று அறிவில் விருத்தியடைவதையும் காண்போர் ஊகிக்கக்கூடியவை என்னவெனின்:—எவ்வளவுபேரறிவுடையோரெனினும் அவரும் அவ்வறிவைப் பிறவியிலேயே பெற்றவரல்லரென்பதும், அவ்வளவு அறிவும் அவர் வருந்தி உழைத்தே அடைந்திருக்கவேண்டும் என்பதுமே. இதை ஒருதாரணத்தால் விளக்கிக்காட்டுவோம். மரமும் செடியும் கொடியும் முளைத்துக் காடுபோற் கிடந்த விடத்தை, மனோகரமான "பீபிள்ஸ்பார்க்"* என்னுமிடமாக்கி இச் சென்னைவாசிகளுக்கு அளித்தவரும், 'வரும்படிவரி' இந்நாட்டிற்கு ஏலாதவரியென்று மேலதிகாரிகளோடு மிக்க போராடினவருமான 'ஸர்சார்ல்ஸ்ட்ரெவல்யன்' என்னும் 'கவர்னர்' பிரபுவின் மனைவியினுடன் பிறந்தோராய் "லார்ட் மெகாலெ" என்று ஒருவர் இருந்தார். அவர் இந்திய 'கவர்னர்ஜனரல்' ஆலோசனைசபையில் ஒருகாலத்து 'மெம்பர்' உத்தியோகம் வகித்திருந்தார். அவர் மிக்க கீர்த்திபெற்ற கல்விமான்; உலகம் திகைக்கும்படியான பேரறிவைப் பெற்றிருந்தார். அவருடைய அறிவு ஒரு புருடாயுளுள் அடைவதற்கு அஸாத்தியமென்று எண்ணத்தக்க அளவாயிருந்தது. இவ்வறிவை அவர் பிறவியிற்பெற்றவரல்லர். மிக்க புத்திகூர்மையும் ஞாபகசக்தியும் இயல்பிலுடையரேனும் இரவும் பகலும் விடாமல் மிக்க பொறுமையோ டுழைத்தே அவர் பேரறிஞரானார்.

பொருள்களி னியல் புணர்ந்து அவற்றைப் பயன்படச்செய்யுமறிவும், நோயில்லாவுடலும், வறுமையில்லா வாழ்வும், குற்றமற்ற நடையும், தானுகர்ந்து பிறர்க்குதவும் குணமும், ஆகிய இவையெல்லாம், சரியான உழைப்பின்றி, எளிதில் வருவனவல்ல. இவற்றுள் முதற்சொல்லிய அறிவே மற்றைநான்கையும் கைகூடுவிப்பதாம். அவ்வறிவோ நல்லுழைப் பின்றி வாரா தென்பது திண்ணம். சிலர் செல்வராயே பிறக்கக்

* 'பார்க்' - உத்தியான வனம்.

கூடுமெனினும் அவரும் அறிவாலல்லது தம் நிலையில் நிற்றலரிது.

உயிருள்ள அளவும் ஒவ்வொருவரும் ஏதேனு மொருவேலை செய்துகொண்டேயிருக்கிறார்கள்; ஏதேனுமொருவிதமான அறிவைச் சம்பாதித்துக் கொண்டே யிருக்கிறார்களென்னின்,—அதுவுமெய்யே; ஆனால் எல்லாவேலையும் வேலையல்ல; எல்லா அறிவும் அறிவல்ல; நல்ல நிலவளமுள்ள தோட்டத்தில் நமது சீர்த்திருத்தம் ஒன்றுமின்றியே ஏதேனு மொன்று உண்டாய்க் கொண்டே யிருக்கிறது. அவ்வாறுண்டாவன வெல்லாம் நமக்குப் பயன்படாவாம்; பயன்படாதிருப்பதன்றிச் சில பயன்படுவனவற்றையும் கெடுக்கு மென்பது நிச்சயம். ஆதலின், அந்நிலவளமுள்ள தோட்டத்துக் குரியவன் கடமை யாதெனின்:—அதைச் சரியானபடி பண்படுத்தி, அதில் விசேடமாய்ப் பயன்படுவனவற்றை உண்டாக்குதலன்றி அத்தோட்டம்சிறந்து கண்களிக்க அமையும்படி அப்பயன்படுவனவற்றில், இன்னது, இன்ன அளவில், இன்னவிடத்தில் இருக்கவேண்டு மென்று ஒழுங்கு படுத்தவும் வேண்டுமென்பதே. அறிவின் பயிற்சியும் இத்தன்மையதேயாம். சரியான வழியில் நல்லவாறுழைத்துப்பயன்படுமறிவைத்தேடுதலன்றி அவ்வறிவு நமக்குவேண்டுங் காலையில் எண்ணியவாறுதவும்படி அதை ஒழுங்கு படுத்தி வைத்தலும் வேண்டும். ஆகவே, நாம் முற் சொல்லியபடி, நோயில்லாவுடலைத்தந்து, வறுமையில்லா வாழ்வையளித்து, மறுவற்ற மார்க்கத்தைக் காட்டி, உலகத்துக்கு உபகாரியாக்கு மறிவே பயன்படுமறிவாம்; இவ்வறிவைக் கொடுக்கும் உழைப்பே நல்லுழைப்பாகும்.

சிலர் "உழைப்பினால் விசேஷப் பிரயோசன மொன்று மில்லை; உழைத்தாலும் உழைக்காவிட்டாலும் வருவது தானேவரும்; வாராதது ஒருநாளும்வாராது" என்று சொல்லிக்கொண்டு காலத்தை வீணாகப் போக்கிச் சோம்பித்திரிகிறார்கள். இப்படிப்பட்ட சோம்பேறிகளைப் போல் குலத்தைக்கெடுக்கும் கோடரிக்காம்பு வேறில்லை. சோம்பியிருத்தல் தெய்வசம்மதமான காரியமன்றென்று நம்மைச் சூழ்ந்துள்ள ஒவ்வொருபொருளும் முறையிடுகின்றது. இப்பூமி, நாடோறும் தன்னைச்சுற்றியும், வருடந்தோறும் சூரியனைச்சுற்றியும் ஓய்வின்றிச் செல்லாநின்றது. காற்றோ பூமியிலுலவித் தீயவற்றைத் தூரத்தில் நீக்கிச் சீதோஷ்ணங்களை மிதப்படுத்திச் சரித்துக்கொண்டே யிருக்கிறது. தண்ணீர், சிலவிடத்து நதியாகவும், சிலவிடத்துக் கடலாகவும் அசைவிலேயே நிற்கின்றது. சூரியனும் பூமியினின்றும் நீரை யிழுத்தவண்ணமாயிருக்கிறான். அமைந்திருக்கும் மலைச்சிகரங்களோ தொழிலற்றிருப்பனவாய்க் காணப்படினும் எப்பொழுதும் வேலையிலேயே யிருக்கின்றன: அவற்றில் ஆவியாய் எழுப்பப்பட்டநீர் இறுகித் தரையின்மீது அருவியாய்ப் பெருகுகின்றது. பிராணிகளில் வேலையற்றிருப்பனவேயில்லை. அற்பப் பிராணிகளும் தம்மிரையைத் தின்னுமுன் அதைத்தேடிச் சம்பாதிக்க அலைகின்றன. ஆகவே, எல்லாமுழைத்தே ஜீவிக்க வேண்டுமென்பது தெய்வத்தின் ஏற்பாடென்பது நிச்சயம். மனிதன் இதற்கு விலக்கானவனல்லன்; எந்நிலைமையிலும் அவனும் உழைத்தே ஜீவிக்கவேண்டும்; வேலைசெய்யாச் சோம்பேறி தன்சரீரத்துக்கும் சுகத்துக்கும் தீங்கு விளைத்தலன்றித் தன்னையண்டியிருக்கும் ஏனையோர்க்கும் தீங்குவிளைக்கின்றான்.

வேறுசிலர், உழைத்தால் எப்பொழுதும் கருதியவாறு பயனுண்டாகிறதென்பது நிச்சயமில்லையே யென்றும், அதிர்ஷ்டசாலிகளாகிய சிலர்க்குமாத்திரம் நற்சமயம் வாய்க்கச் சரியான பயனுண்டாகிறதன்றி, மற்றவர்களுக்கு அப்படிக்கில்லையென்று மெண்ணித் தம்முயற்சியைக் குறைக்கிறார்கள். அவ்வாறுசெய்வது சரியன்று; ஏனெனின், நற்சமயம் வாய்க்கப்பெற்றுப் பெரும்பய னடைந்த அதிர்ஷ்டசாலிக ளெனப்படுவோரின் சரித்திரத்தைப்பார்த்தால் அவர்களில் அநேகர் பலகஷ்டங்களி லகப்பட்டுத் தம்மை மேலெழும்பவொட்டாமல் தடுத்துவந்த இடையூறுகளை விலக்கித் தமக்குப் பிரதிகூலமாயிருந்தவைகளை யெல்லாம் அநுகூலமாக்கிக் கொண்டவர்களாகக் காணப்படுகிறார்கள். இதை இரண்டோருதாரணங்களால் விளக்கிக் காட்டுவோம்.

உலகத்துக்குப் பரமோபகாரமாகப் புகை வண்டியை யுண்டாக்கி, அதைக் கொண்டுநடத்துவதற்கு வேண்டிய எல்லா அங்கங்களையும்

ஒன்று குறையாமல் ஏற்பாடுசெய்த "ஸ்டீவன் ஸன்" என்பவர் நிலக்கரிச்சுரங்கத்து ஒரு நெருப்பு வேலைக்காரரின் குமாரர்; சிறுவராயிருந்த பொழுது மாடு மேய்த்துக்கொண் டிருந்தார். ஒருவரும் கணிக்காத இத்தாழ்மையான நிலைமையிலிருந்து பெரிய உலோகோபகாரியாவதற்கு எவ்வளவோ பிரயாசைப்பட்டு எத்தனையோ இடையூறுகளுக்கு வருந்தி அவற்றைக்கடந்து போந்திருக்கவேண்டுமென்பது எளிதில் யாவரும் ஊகிக்கக்கூடியதே. மிக்க கீர்த்திபெற்றுச் சிறந்து விளங்கிய ரஸாயன சாஸ்திரக்ஞரான "பாரடே" * என்பவரின் சரித்திரமும் இதைப்போன்றதே; அவர் ஒருகொல்லன் புதல்வர்; இளமையில் புஸ்தகம் கட்டுபவனிடத்தில் வேலை கற்றுக்கொள்ள அமர்ந்து முன்னுக்கு வந்தார்.

இவர்களன்றிச் சில வருஷங்களுக்குமுன் இங்கிலாண்டில் 'போஸ்ட் மாஸ்டர் ஜனரல்' உத்தியோகத்திலிருந்து இறந்துபோன 'பாஸெட்'† என்பவர் சர்வகலாசாலையிற் கல்விகற்றுத்தேறியபின் "இவர் உலகத்தில் அநேக விசேஷகாரியங்களைச் செய்யவல்லவர்" என்று பிறரும், "இம்மகனைப் பெற்றுப் பெரும்பேறு பெற்றேன், இவனால் எனக்கு எல்லாப்பெருமையும் கிடைக்கலாம்" என்று தந்தையும் எண்ணியிருக்குங்காலத்தில்,மிக்க பாலியமான(உரு-ம்) பிராயத்தில் தாமும் தம் தந்தையும் வேட்டைக்குப் போனவிடத்தில், தந்தை தூரத்தில் ஒரு செடிநிழலில் மிக்க ஒளிவீசும் கண்களோடு ஒருபறவை மறைந்து நிற்கிறதென்று மயங்கி அறியாமல் அத்திசை நோக்கிச்சுடவே, சுட்ட துப்பாக்கியினின்றும் இரண்டு ஈய ரவைகள் செடிமறைவில் நின்ற தம்மகனது இரண்டுகண்களிலும்பாய, இரண்டுகண்களையும் இழந்துஉலகத்தையே இழந்தவர்போலானார். அதன் பின்னர், தம்மால் பெரும் பயனடையலாமென்று எதிர் பார்த்திருந்த தம் தந்தை "என்மகன் உலகிற்கு உபகாரியாகாமலே போகும்படி அவனுக்கு நானே இத்தீங்கு விளைத்தேனே" என்று மனம் வருந்தித் துயருறாவண்ணம் தம் கண்ணால் ஆகவேண்டியவற்றை, பிறரொருவர் கண்ணால் செய்வித்துக்கொண்டு, கண்ணிருப்பவன்போலவே இவர் வேலைசெய்ய உறுதி செய்துகொண்டார். அவ்வுறுதிப்படியே உழைத்து வேலைசெய்து, 'பார்லிமென்ட்' ஜனப்பிரதிநிதி சபையில் முக்கியமானவரில் ஒருவராகவும் ஆனார். இவர், அடிமுதல் நுனிவரையில் செவ்வையாய் ஆராய்ந்தன்றி, ஒன்றையும் பேசார், ஒன்றையும் நடத்தார்; இவர் இந்தியாவின்மேல் மிக்க அபிமானமுள்ளவர்; இத்தேசத்து வரவு ஷாந்தர வரவுசெலவு கணக்குகளைக் குறித்துப் 'பார்லிமென்ட்' சபையில் பிரசங்கமுண்டாகுங் காலத்தெல்லாம், இவர் அவ்விதமான கணக்குகளில் வெகு நிபுணராகையால், லக்ஷம்கோடிக் கணக்கானதொகைகள் அநேகங்களைக்குறித்து நல்ல நிச்சயமான அறிவோடு பேசுவார்; ஞாபகக்குறிப்பு ஒன்றுமின்றிச் சிலவேளைகளில் ஒருமணி இரண்டுமணி நேரம் அநேக விஷயங்களடங்கிய பிரசங்கங்கள் செய்வார்; இவர், இவ்வாறு செய்வது தமக்குள்ள ஞாபக சக்தியாலல்லவென்றும், சொல்லவேண்டியவற்றை ஒருவாறு காரணகாரிய சம்பந்தத்துடன் மனத்து ஒழுங்கு படுத்திப் பிரசங்கிக்கத் தொடங்கினால், ஒவ்வொன்றும் உரிய காலத்தில் உரிய வார்த்தைகளால் வெளிப்படும் என்றும் சொல்லுவார். இவர் சரித்திரத்தை ஊன்றிப் பார்ப்போர் யாவர்க்கும் எந்நிலைமையிலும் "முயற்சி யுடையோர் இகழ்ச்சி யடையார்" என்பது செவ்வையாய் விளங்கும்.

அதிர்ஷ்டசாலிக ளெனப்படுவோரின் காரியமிவ்வாறிருக்க, அதிர்ஷ்டமில்லாதவ ரெனப் படுவோரில் அநேகர் வாய்த்த சமயத்தைப் பயன்படுத்தாமல் வீணாக்கினவர்களாகக் காணப்படுகிறார்கள்.

இன்னும் சிலர், புத்திவன்மை எல்லாவிதத்திலும் சிறந்ததாயிருந்தாலல்லவோ உழைப்பினால் முதன்மையாய் வரக்கூடும்; உலகிற்குப் பேருபகாரியாகவுமாகக்கூடும்; அத்தன்மையான புத்திவன்மை யில்லாதவரின் பிரயத்தனத்தால் பிரயோசனமொன்று மில்லை யென்று எண்ணுகிறார்கள். அப்படி நினைப்பதும் சரியன்று. எல்லாருக்கும் புத்திவன்மை எல்லாவிதத்திலும்சிறந்ததாயிருத்தல்இல்லையென்பது மெய்யே; ஆதலால் எல்லாரும் முதன்மையாய்

* Faraday, † Henry Fawcet.

வருதல் கூடாதகாரியமே. உலகத்துக்குப் பேருபகாரிகளாய் எங்கும் கீர்த்திபெற்று விளங்குபவர் சிலரேயாம். ஆயினும், புத்திவன்மை சிறிதுமில்லாது பிறப்பவரே யில்லையாகையால் உலகமுழுவதும் மதிக்கத்தக்க காரியஞ்செய்தல் எல்லாருக்கும் கூடியதன்றெனினும், ஒவ்வொருவரும், தம்மூராரும் தம்மை யறிந்தோரும் நன்குமதிக்கும்படி நடந்துகொள்ளக் கூடுமாதலின் பரோபகாரியாயிருத்தல் யாவராலும் சாத்தியமென்பது நிச்சயமே. ஆனால் ஒவ்வொருவரும் தமக்குச் சிறிதேனுமுள்ள புத்திவன்மையைச் செவ்வையா யுபயோகித்து, வாய்த்த சமயங்களை வீணுக்காது பயன்படுத்தி, நல்லறிவைத்தேடி, அதற்குத் தக்கபடி நடந்துகொள்ளல் வேண்டும். அப்படிச் செய்பவரே தமக்குரிய கடமையைச் செய்பவராவார். இது யாவராலும் செய்யக்கூடியதே.

முற்சொல்லியவையன்றி, எல்லோரும் ஒருக்காலும் மறவாது கருத்தில் வைக்கவேண்டியது வேறொன்றுளது; அஃதாவது உள்ளும்புறமும் ஒத்திருத்தலேயாம். வெளித்தோற்றத்தில் மிக்க அறிவுடையோர்போன்றும், நன்னடையோர் போன்றும், உலகோபகாரிகள் போன்றும் வேடம்பூண்டொழுகுவோர் பலர். இவ்வேடம் சிறிதுகாலம் பலிப்பதுபோற் காணப்படினும் சமயத்தில் மோசஞ்செய்யுமென்பது நிச்சயம்; அஃது உண்மையைப் புறத்தாக்கி ஆற்றொணு அவமதிப்பை விளைவிக்குமாகையால், வெளித்தோற்றத்துக்கேற்க உள்ளத்துண்மையும் இருத்தல்வேண்டும். அஃதவ்வாறு அமைந்திருக்குமிடமே நன்னெறியுள்ளவிடமாகும். நன்னெறியே நன்குமதிப்புக்குக் காரணமாம். இந்நன்னெறியையும் அதனாலுண்டாகும் நன்குமதிப்பையும் யாவரும்பெற வல்லவரேயாம்.

இதுவரையிற் சொல்லியவற்றால் யாம் வற்புறுத்துவது யாதெனின்,—எல்லாரும் உள்ளும் புறமும் ஒத்துத் தம்மைத் தமக்கும் பிறர்க்கும் பயன்படச்செய்துகொள்ளக் கூடுமென்பதும், இதுவே எல்லாருக்கும் முக்கியக்கருத்தாயிருக்கவேண்டுமென்பதும், இதற்கு அறிவைச் சாதனமாய் அடையவேண்டுமென்பதும், சோம்பலின்றித் தமக்கு இயற்கையிலுள்ள புத்திவன்மையைச் சரியானபடி உபயோகிப்பவருக்கே நல்லறிவுண்டாகுமென்பதும், நல்லறிவைப்புகட்டும் புத்தகங்களைப்படித்தலிலும், நல்லோரோடிணங்கலிலும், பொருள்களின்குணங்களை நன்காராய்தலிலும், இயற்கைவன்மையை உபயோகப்படுத்துவதே அறிவுக்குரிய உழைப்பென்பதும் யாவரும் நன்குணரவேண்டுமென்பதே.

இயற்கையிலுள்ள புத்திவன்மையைவாய்த்த சமயத்துத் தக்கபடி உபயோகித்து, அறிவை யடைந்து, அதை யுக்தாயுக்தமுணர்ந்து பயன்படச்செய்வதே விவேகமெனப்படும். இவ்விவேகம் சிந்தித்ததைத்கொடுக்கும் இயல்பினதாகையால் இது சிந்தாமணியேயாம். ஆதலின் இவ் விவேகசிந்தாமணியை யாவரும் பெற்றுப் பயன்படல் வேண்டுமென்று யாம் எப்பொழுதும் பிரார்த்திக்கின்றோம்.

எஸ். நாராயணசாமி ஐயர்.

---

## தமிழ்ப் பாஷைப் பயிற்சி.

[தமிழ்ப்பாஷை சிறந்ததும் இனியதுமென்று அப்பாஷாபண்டிதர்கள் அதைப்பற்றிப் பேசுங்கால் பெருமைகொண்டாடினும், அப்பாஷைப் பயிற்சி தற்காலம் தமிழைச் சுயபாஷையாகவுடையாருள்ளும்விர்த்தியடையாமல் க்ஷீணித்துவருகிற விஷயம் யாவரும் அறிந்ததேயாம். யாவரும் அறிந்தும், அப்பாஷையை அநாதரவு செய்வதுபிசகென்று பல்லோர்கூறியும், அதை யாதரித்து அப்பாஷையின் பயிற்சியை விர்த்தி செய்யவும், கற்றறிந்தோர் தாமறிந்தவற்றைச் சாதாரண ஜனங்களும் அறியும்படி அப்பாஷையில் தெரிவித்து, தற்காலத்தெங்கும் எல்லாரும் அறியவேண்டிய தவசியமான பலமுக்கிய விஷயங்கள், கருத்துகள், அபிப்பிராயங்களைத் தெள்ளிதாகத் தெரிவித்து, உபயோகமான அறிவைச்சனங்களுக்குள் பரவச்செய்வது சாத்தியமாகும்படி அப்பாஷையையே காலதேசமாறுபாடுகளுக்கு ஏற்க வழக்கத்தில் விர்த்தி செய்யவும், பலர் ஒன்று சேர்ந்து பெருமுயற்சி செய்து பயன்விளைவித்ததைக்காணோம். இவ்வித முயற்சி செய்ய நம்முள் தக்கோர் பலருளர். ஆனால் அவர்கள் ஒத்து நின்று ஒருங்

காக உழைப்பதே அரிதாயிருக்கிறது. உழைக்க வேண்டுமென்று ஒருகால் நல்லெண்ணங் கொண்டு எடுத்த முயற்சியும் ஆரம்பத்தில் அடிப்போட்டதோடு நின்றது. இப்பொழுது தமிழ்ப்பாஷை சீர்பெற்றுப் பரவி முற்றும் பிரயோசனப் படுவதற்கு வேண்டிய அம்சங்கள் பலவற்றுள் முக்கியமானவை இரண்டு. முதலாவது நம்மில் கற்றோருக்குள் தமிழ்ப்பாஷைப் பயிற்சி பரவி விர்த்தியடைய வேண்டும். அவர்கள் முயற்சியால் உபயோகமான அறிவைப்பரவிச் செய்வதற்கவசியமான, சாதாரண ஜனங்களுக்கும் விளங்கத்தக்க சுலபமான வாசகநடை தமிழில் விர்த்தியடைந்து வழக்கத்துக்கு வர வேண்டும். இதற்குப் பழங்காலத்துப் பண்டிதர்கள் உதவி விசேஷமாகப் பிரயோசனப் படாது. அவர்கள் தங்கள் சுபாஷையின் அருமைபெருமையைக் கொண்டாடும் செருக்கில் உபயோகத்தை மறந்து, வர்ணனையும் வெறுஞ் சொற்பிரயோகங்களும் நிறைந்த ‘உயர்நடை’யையே உச்சிதமாகப் பாவித்தனுசரிப்பார்கள். அல்லது விருத்தங்களும், அந்தாதி, கலம்பகம் முதலிய வெறுங்கவிகளும் பாடப் புறப்படுவார்கள். இவையெல்லாம் அவைமட்டில் நல்லவையேயாயினும் இக்காலத்துக் கேற்றவை யல்ல. காலவியற்கை முன்போலின்றி மாறி விட்டது. காலம் வரவரக் கஷ்டகாலமாய் வருகிறது. ஜனங்களில் பெரும்பான்மையர்க்குப் படிப்பில் மனோரதியமான சந்தோஷ மனுபவிப்பதற்குப் போதுமான அமயமும் அவகாசமுமில்லை. உலகில் அறிவும், ஞானமும் அதிகமாக விர்த்தியாகி, இத்தேசத்திலும் அவையுள்ளவர்க்கே வயிற்றுப் பிழைப்புக்கு வழியகப்படுவது சாத்தியமாக ஆய்விட்டது. காலஸ்திதி இப்படியிருப்பதால் யாவரும் உபயோகமானதும் ஊதியமளிப்பதுமான அறிவையே தேடுகிறார்கள். அவ்விரண்டுந் தரும்அறிவு தற்காலம் பெரும்பாலும் ஆங்கிலேயபாஷை மூலமாகவே பெறுவது எளிதாக விருக்கிறது. ஆகையால் இங்கிலீஷ் படித்தவர்கள் அப்பாஷையிலுள்ள புஸ்தகங்களையே மேன்மேலும் வாசிக்கப் பிரியம் கொண்டவர்களாகிறார்கள். தமிழ்ப் பாஷைப் பயிற்சி பல விதத்திலும் அசட்டை செய்து விடப்பட்டதால் அப்பாஷையில் அவர்களுக்குச் சாதாரணமாய்த் தேர்ச்சியின்றிப் போய்விட்டது. இங்கிலீஷ் படிக்காத ஜனங்களுக்கு நித்தியப்படி ஜீவனத்துக்குபயோகமான அறிவு பலவகையில் வேண்டியதவசியமாயிருந்தும், சுயபாஷையில் அவர்கள் தாமாக வாசித்துக் கிரகிக்கத்தக்க உபயோகமான புஸ்தகங்கள் அதிக மின்மையால், அவர்கள் அறிவையடைய ஆவல் கொண்டும் ஏற்ற வழியின்றித் தவித்துச் சும்மா இருந்து விடுகிறார்கள். இப்படித் தீராப்பொறியாகச் சும்மாவிருக்கவேண்டி நேரிடுவது வழக்கபலத்தால் சோம்பற்றனமாகமாறி அறிவையடைய வேண்டுமென்கிற ஆசையே இல்லாமற் போகிறது. அப்படியேதாவது கொஞ்சநஞ்ச மிருக்கும் ஆசை வேதாளக்கதை, மதனகாமராஜன் கதைகளும், ‘தன்னனே’ப் பாட்டுப் புஸ்தகங்களும் வாசிப்பதில் திர்ப்தி யடைந்து, தமிழில் புஸ்தக மூலமாய் அறியத்தக்க அறிவு அவ்வளவேயென்று, அவர்கள் அறிவு நிலை அந்தமட்டில் நிற்கிறது. கொஞ்சம் அதிக விவேகமும் புத்திவன்மையு மிருந்தால் சமய, புராணாதி நூல்களிலும், வீண்கட்டுக்கதைகளிலும் சென்று நஷ்டமடைந்து சோர்ந்து விடும். இப்படி இங்கிலீஷ்படித்தவர்களுக்கும் தமிழ்ப் படித்தவர்களுக்கும் சாதாரணமாய்த் தமிழ்ப் பாஷை தற்காலத்துக் குபயோகமான அறிவையூட்டக் காரியத்தில் பிரயோசன மற்றதாகப் போகிறது. இதனால் நமது ஜனங்களுக்கும் தேசத்துக்கும் விளையும் தீங்குகள் அற்பசொற்பமல்ல. அவற்றைப் பற்றிப் பேசப்புகின் மிகப் பெருகும். படித்தவர்களெல்லார்க்கும் உபயோகமான அறிவைப்பரவச் செய்யப் பிரயோசன மில்லாத ஸ்திதியிலிருக்கும் பாஷை, மற்றெல்லாவற்றிலும் உபயோகத்தையும் ஊதியத்தையும் பெரிதாக நாடிநடக்கும் 19-ம் நூற்றாண்டினிறுதியான இக்காலத்தில், சீக்கிரம் கவனிக்கப்படாவிடிற் சீரழிந்து, சிறப்புக் கெட்டுச் சிதறிப் போகுமென்பதற்குக் கேட்பானேன்? தமிழ்ப்பாஷை சீரழிந்துசிதறிப் போகாதிருக்க அவற்றிலுள்ள ஆதிநூல்களையும் சிறந்த கிரந்தங்களையு மழிந்து போகாமற் காப்பாற்ற வேண்டியதவசியமென்பதிற் றடையில்லை. அத்தோடு அப்பாஷை ஜனங்களால் படித்துக்

கொண்டாடப்படவேண்டுமானல் தற்கால அறிவையூட்டத் தகைமையுடையதாக அதைச் செய்யவேண்டியதும் அவசியமேயாம். முற்சொன்னவழியிற் சிற்சிலர் சிரமப்பட்டுழைத்துத் தமிழ்ப்பாஷையைக் காத்தவரென்னும் கீர்த்திக்குப் பாத்திரராய் வருகிறார்கள். பின்சொன்ன வழியிலுழைப்போரும் சிற்சிலரங்கங்கேயிருக்கிறார்கள். ஆனால் அவர்கள் மூலைக்கொருவராகச் சிதறுண்டு கிடக்க அவர்கள் ஒவ்வொருவர் செய்யு முயற்சியும் அவரவர்களையறிந்தார்க்குள்ளே சுழன்று அந்தமட்டோடு அமுங்கி விடுகிறது. தமிழ்ப்பாஷையைச் சனப்பிரீதிக் கிசைந்ததாகச்செய்து விர்த்திக்குக் கொண்டுவர இரண்டு அம்சங்களிருக்கவேண்டியது அத்தியாவசியகம். ஒன்று: இங்கிலீஷிற் கற்றறிந்தாராயிருப்பதோடு தமிழிலும்தேர்ச்சி பெற்றோர் சாதாரண ஜனங்களுக்குப் புலப்படு நடையில் உபயோகமான விஷயங்களைப்பற்றி பெழுதுவதோடு, தமிழிற் பயிற்சியில்லாத இங்கிலீஷ்படித்தவர்கள் அப்பாஷைபயின்று அதில் ஒருவாறு தேர்ச்சியடைய வகையும்காட்டி யெழுதவேண்டியது முதலவசியம். அவர்கள் எழுதினவை ஓர் சிறுபுஸ்தகமாகவோ பிரசங்கமாகவோ வெளியிடப்பட்டு, மிகவும் நெருங்கி வரையறுக்கப்பட்ட சிறுவட்டமான சிலர் நடுவே மட்டும் வழங்கி யமுங்காது, படித்தோர் பாமரர் யாவராலும் படிக்கப்பட்டு நாடெங்கும் வழங்கிவரத்தக்க வசதிவேண்டிய திரண்டாவ தவசியம். அத்தியாவசியகமான இவ்விரண்டு முக்கியாம்சங்களும் ஒருங்குபொருந்தியிருந்தால்தான் நாடெங்கும் அறிவுபரவி, கற்றோரும் மற்றோரும் கருத்திற் கலந்து, நமது தேசத்தார் தமக்குள் தாமே பிரிவினை யடையாது, கற்றவர் போனவழி மற்றவர் பின்தொடரவும், பின் தங்கினோரை முன் செல்லவைக்கக் கற்றவர் கவனித்துழைக்கவு மாக இப்படி எல்லவரும் ஒருமித்து முன்னகர நம்மவர் ஜாதிமொத்தத்தில் சீரடைந்து முன்னுக்கு வர வழியுண்டாகும். இந்த இரண்டு அம்சங்களையும் பொருந்த அமைத்து மேலே சொன்ன விதம் ஓர் வழி பிறப்பிக்க வேண்டு மென்று தான் "அறிவைப்பரவச் செய்யும் ஏற்பாடு" ஒன்று தயார் செய்து அவ்வேற்பாட்டுப்படி இந்த விவேகசிந்தாமணியையும் வெளிக்கொண்டு வரலானோம். இதை வெளிக்கொண்டுவரத் துணியுமுன், பெரியோர் பலரையும் கண்டு பேசி, அவர்கள் ஆலோசனையை மேற்கொண்டு அங்கீகாரத்தையும் பெற்றுக்கொண்டோம்; அறிவுக்குறைவிடமாகிய அறிஞர் பலரிடத்தும் சென்று நேரிலும் கடிதமூலமாயும் அவர்களிடத்துள்ள அறிவைச் சனங்களுக்கு ஊட்ட இவ்வேற்பாட்டுக் கிசைந்துதவி புரிய வேண்டு மென்று கேட்டுக்கொண்டோம். நாடெங்கு முள்ள விவேகிகளுக்கெல்லாம் விண்ணப்பம் செய்து அறிஞர் பலரெழுதும் விஷயங்களைத் தாங்கள் வாங்கி வாசிப்பதுடன் பன்னாட்பழக்கத்தின் விசையால் படிப்பிற் பிரியமற்றுக் கிடக்கும் சாமான்ய ஜனங்களுக்கும் படித்துக்காட்டி வலுவிலூட்டி அவர்களுக்குச் சிறுகச் சிறுகப் படிப்பில் பிரிய முண்டாக்கி விடக் கேட்டுக் கொண்டோம். இவ்விரு தரத்தாரிலும் நமது வேண்டுகோளுக் கிசைந்து வாக்களித்தோர் பலர். அவர்கள் வாக்கை நம்பி அவ்விருதரத்தார்க்கும் நடுவிலிருந்து அறிவைப் பரவச்செய்யும் விஷயத்தில் அவர்களுக்குப் பணியாளாகவிருந்துழைக்கத் துணிந்து இக்காரியத்தில் இறங்கிவிட்டோம். இனி நம்மைக் கரையேற்றிவிட்டாலும் அல்லதுநட்டாற்றிற்கைவிட்டு வேடிக்கைபார்த்தாலும் அதனால்வரும் பாபபுண்ணியம் அவர்களதே. நம்மட்டில் நமது கடமையைச் செய்து வரச் சிறிதும் தளரோம். நமது வேலை சிறப்பதும்சிறக்காததும் நம்மனோர் இச்சத் விஷயத்தில் ஒத்துநின்று நமக்குக் கைகொடுத்துதவும் உதவியின் அளவினதாகவிருக்கும். நம்மவரில் கற்றோர் மற்றோர் எல்லாரும் இது விஷயத்தில் ஒத்து நின்று உதவிபுரிந்து அறிவைப் பரவச் செய்யச்சுத்த இருதயத்தோடுழைக்கவேண்டுமாய் இன்னொருகால் அவர்களெல்லார்க்கும் விண்ணப்பம் செய்து கொண்டு, "தமிழ்ப்பாஷை" விஷயமாய் ம-ா-ா-ஸ்ரீ, த. சரவண முத்துப் பிள்ளை யவர்கள் பி. ஏ. இயற்றிய உபந்யாசம் ஒன்றை இப்பத்திரிகையிற் பிரசுரிக்கவென்று அவர்கொடுத்த அனுமதிப்படிக்குக் கீழே பிரசுரிக்கிறோம்.-ப-ர்.]

## தமிழ்ப்பாஷை *

(த. சரவணமுத்துப்பிள்ளை யவர்கள் பி. ஏ. இயற்றியது.)

யாதொருபாஷையாயினும் அதன் தாரதம்மியத்தை யெடுத்துரைப்பானொருவன் அப்பாஷையைக் கசடறக்கற்றவித்துவானா யிருத்தலவசியமாக, இவ்விஷயத்தைப் பற்றி யான் பேசத்துணிந்தது யாதுகாரணம் பற்றியோ வென்னில், இவ்விஷயத்தைப்பற்றிப் பேசத்தக்க வலிமை சார்ந்த வித்துவான்கள் பலரும் மௌனமாயிருத்தலினாலே யானும் பிறதேயம் புகுவோர்க்குச் சிறுகுழந்தையும் வழிகாட்டுவதுபோலேயும், சங்கீதவித்துவான் வீட்டிற் றவழுங்குழந்தையுங் கைக்குவந்தவா தாளந்தட்டி வாய்க்கு வந்தவா பாடிக்களித்தல்போலேயும் பேசத்துணிந்தே னன்றிப் பிறிதொருகாரணம் பற்றியன்றென்க.

தமிழின் சிறப்பெடுத் துரைப்பதென்? அதன் உற்பத்தியை நோக்குங்காலத்தே அதன் மகிமை யுள்ளங்கை நெல்லிக்கனிபோற் றெற்றெனப்புலப்பட வில்லையா வெனக்கடாவுவாருமுளர். தமிழி னுற்பத்தியாதோ வெனப் பண்டிதரை வினவுவோமேல் அதைப்பற்றிப் பல கொள்கைக ளிருப்பதாகத் தெரியும். சத்த சமுத்திரத்தையு மோருழுந்தளவாக்கி யுள்ளங்கையில் வைத்துப் பானஞ்செய்தருளிய அகத்தியமகாமுனிவரா லன்றோ தமிழியற்றப்பட்டதென்பா ரொருசாரார். சூரபத்மனை வேல்கொடு தடிந்து அமரர் தம்மிடரை யடியோடு களைந்த சுப்பிரமண்ணிய சுவாமியாலன்றோ தமிழியற்றப்பட்டதென்பார் மற்றொருசாரார். திரிபுர மெரித்த விரிசடைக் கடவுளன்றோ தமிழிற் காதிநாயகரென்றறைவோ ரனேகர். ஆகவே தமிழின் மகிமை தானே புலப்படுகின்றதென நமது தமிழ்ப்பண்டிதர் மனமகிழ்ந்திருக்கின்றனர். ஆயின் அவர் செய்தபாவமோ தமிழ் செய்த புண்ணியமோ யாதோ வறிகிலேன், தற்காலத்து அவர் மாற்றம் அவைக்கேறாது போகின்றது. ஆங்கிலேய பாஷை கற்று அணுவேனு மாங்கிலேயசாஸ்திரங்களிற் பயின்றோர்க்கு அவர் கூற்று நகை விளைக்கின்றது. யாதொருபாஷையாயினும், அது எவ்வளவு அற்பமாயிருந்தபோதினும், அது ஒருவனாற் சிருஷ்டிக்கப்பட்டதென்பதைத் தற்காலத்துக் கைக்கொள்ளார். அதுநிற்க, சிவபெருமானே தமிழ்ப்பாஷையைச் சிருஷ்டித்தாரென வைத்துக்கொள்வோம். அதனாற் றமிழ் பெற்ற பயன் யாதோ? தமிழ் மாத்திரம் தானா கடவுளாற் சிருஷ்டிக்கப்பட்டது? மறுபாஷைகள் யாவராற் சிருஷ்டிக்கப் பட்டனவோ? அன்றித் தாமே முளைத்தனவோ? சகல பாஷைகளுங் கடவுளாற் சிருஷ்டிக்கப் பட்டனவாயின், தமிழ் கடவுளால் சிருஷ்டிக்கப்பட்டது என உரத்துக் கூறுவதனால் தமிழ்பெற்ற ஊதியமென்னோ? அற்றன்று, தமிழ் கடவுள் பேசும்பாஷையென்பராயின் மறுபாஷைகள் கடவுட்குத் தெரியாதா? மறுபாஷைகள் பேசுவோரிடத்துக் கடவுள் பேசவேண்டுமாயின் தமிழிலேயா பேசுவார்? அல்லது மொழிபெயர்ப்பதற் கொருவரை வைத்திருக்கின்றனரா? அல்லது அவரவரிடத்து அவரவர் பாஷையே பேசுவராயின் தமிழைக் கடவுள் பேசினார் என்பதனால் தமிழ்க்கென்னபயன்? அதுவுமன்றி கடவுள் ஹீப்ரு பாஷை பேசினாரெனக் கிறிஸ்தவரும், அராபி பாஷை பேசினாரென மகமதியருங் கூறில் அவர்க்கு யாது சமாதானஞ் சொல்வரோ? அவர்சொல்வது பொய், யாம்சொல்வது மெய் எனப்பன்முறை வற்புறுத்திக் கூறுவர்போலும்.

அதுநிற்க, கடவுள் தமிழையியற்றினாரென்பதற் கத்தாட்சி யாதென நமது பண்டிதரை வினவுவோமேல், வடகலை தென்கலை வரையறவுணர்ந்த சிவஞான மகாமுனிவர் காஞ்சிபுரா

*[இவ்வுபந்நியாசம் சென்னைத் துரைத்தன பாடசாலைத் தமிழ்ச் சங்கத்தின் முன்வாசிக்கத் தயார் செய்யப்பட்டது. அங்கு வாசித்ததை அப்படியே அவர் "நண்பர்பலர் அச்சிட்டுத் தரும்படி கேட்டுக்கொண்டதன் பேரில் அச்சிடத் துணிந்தே னன்றிப் பிறிதொரு காரணம் பற்றி அச்சிட்டே னல்லன்" என்று அவர் முகவுரையிற் கூறியிருக்கிறார். அப்படி யச்சிட்ட உபந்நியாசம் பாஷையின் நோக்கமிது, தமிழ்ப்பாஷையிருக்கும் நிலை, அதை விர்த்தி செய்யவேண்டிய விதம், தமிழ்ப் பாஷையிலுள்ள இலக்கியங்கள், அவற்றைப்பற்றித் தெரிந்த சுருக்கமான விவரங்கள் ஆகிய இம்முக்கிய விஷயங்களைப் பற்றி தமிழ்ப்பாஷையில் சிரத்தையுள்ள எல்லோர்க்கும் பிரதமத்தி லுபயோகமான அறிவை யூட்டுவதாயிருப்பதால் அக்காரணம் பற்றி அதை யாவருமறிய விவேகசிந்தாமணியில் பிரசுரிக்கவேண்டிக் கொண்டோம். அதற்கிசைந்தபடி அவர் பேருடன் அவ்வுபந்நியாசத்தின் முக்கிய பாகங்களை இங்கே பிரசுரிக்கிறோம்.-ப-ர்.]

ணத் தவ்வாறு கூறினாரன்றோ? முருக மூர்த்தி திருவருள்பெற்ற கச்சியப்ப சிவாசாரியார் கந்தப்புராணத் தவ்வாறு கழறிப்போந்தன ரன்றோ? சோமசுந்தரர் துணையடிபரவும் பரஞ்சோதி மாமுனிவரும் திருவிளையாடற்புராணத் தவ்வாறு கூறியிருக்கின்றனரன்றோ வென்பார். அதையும் நம்பாது நெருக்கிக் கேட்போமேல் உடனே,

வடமொழியைப் பாணினிக்கு வகுத்தருளியதற் கிணையாத்
தொடர்புடைய தென்மொழியை யுலகமெலாந் தொழுதேத்தக்
குடமுனிக்கு வலியுறுத்தார் கொல்லேற்றுப்பாகரெனிற்
கடல்வரைப்பி னிதன்பெருமை யாவரே கணித்தறிவார்.

இருமொழிக்குங் கண்ணுதலோர் முதற்குரவ ரியல்வாய்ப்ப
இருமொழியும் வழிப்படுத்தார் முனிவேந்த ரிசைபரப்பும்
இருமொழியு மான்றோரே தழீஇயினா ரென்றாலிவ்
இருமொழியு நிகரென்னு மிதற்கைய முளதேயோ.

கண்ணுதற்பெருங் கடவுளும் கழகமோ டமர்ந்து
பண்ணுறத்தெரிந் தாய்ந்தவிப் பசுந்தமி ழேனை
மண்ணிடைச்சில விலக்கண வரம்பிலா மொழிபோ
லெண்ணிடப்படக் கிடந்ததா வெண்ணவும் படுமோ.

தொண்டர்நாதனைத் தூதிடை விடுத்ததும் முதலை
யுண்டபாலனை யழைத்தது மெலும்புபெண் ணுருவாக்
கண்டதும்மறைக் கதவினைத் திறந்ததுங் கன்னித்
தண்டமிழ்ச்சொலோ மறுபுலச் சொற்களோ சாற்றீர்.

என இன்னும் பல பாட்டுகளைச் சொல்லி நமது வாயை யடக்குவர். இதனால் தமிழின் மகிமை உருபிக்கப்பட்டதாகாது. ஆனால் வேறெவ்விதமாகத் தான் தமிழின் சிறப்புக்கூறலாமென்னின், என் சிற்றறிவுக் கெட்டியவாறொருவாறு கூறுகின்றேன்.

மனிதர் தம் மனக்குறிப்பை யொருவர்க்கொருவர் அறிவிப்பதற்கு மூன்று வழிகளுள்ளன: 1, சைகை. 2, பேச்சு. 3, எழுத்து. மனிதர் சீர் திருந்துவதற்குமுன் தம் மெண்ணங்களைச் சைகையினாலேயே யறிவித்தனர். தற்காலத்தும் திவாந்தரங்களிலுள்ள சீர்திருந்தாத சில சாதிகளுள் சைகையே பெரும்பாலும் வழங்குகின்றது. சில சாதிகளிடத்தில் பாஷையிருந்தும் பேசும்பொழுது சைகைசெய்யாவிடின் அவர் பேச்சுப் பிறர்க்குவிளங்காது. அமெரிக்காவிலுள்ள ஒரு சாதியார் இருட்டில் பேசமாட்டார்கள். தம்வீட்டிற் கொருவர் வந்தால் முதல் விளக்குக் கொளுத்திப் பிறகு தான் பேசுவார்கள். அதுவுமன்றித் தற்காலத்திலுள்ள சீர்திருந்திய சாதிகளுள்ளும் நன்றாய்த்திருந்திய பாஷையிருந்தும் சைகையும் கூட வழங்குகின்றது. நாவல்லமையிற் சிறந்தோரென்று பேரெடுத்தோர் பெரும்பாலும் சைகையின்றிப் பேசார். அவர்பேசும்பாஷை மதுரமாயுந் தெளிவாயு மிருந்த போதினும் அவர் கூறும்பொருள் அவர் சைகையினால் நமக்குத் தெற்றெனப் புலப்படுகின்றது. எழுத்தோ, 1. படமெழுதல், 2. பேசும் பாஷையை யெழுத்தினா லெழுதலென இருவகைப்படும். படமெழுதலுஞ் சீர்திருந்தாத சாதிகளிலேயே வழங்குகின்றது. ஒருவன் வந்தானென எழுத வேண்டுமாயின் ஒருமனிதன் நடப்பதுபோலெழுதுவார்கள். இவ்வழக்கம் சீர் திருந்திய சாதிகளுட் பெரும்பாலு மிலாது சிறு பான்மை காணலாம். ஒரு சண்டையைப் பற்றிப் பிரசங்கஞ் செய்வோ ரொருவர் சண்டை செய்வது போலெழுதப்பட்ட வொருபடத்தைக் காட்டிப் பிரசங்கிப்பராயின் படமெழுதலும் சிறுபான்மை வழங்குகின்றதன்றோ? ஆயின் சீர்திருந்தியசாதிகளுள் பெரும்பான்மையும் வழங்குவது பேசலும் அதை எழுத்தால் எழுதலுமே. ஆகவே திருந்திய பாஷையுடைத்தா யிருத்தல் சீர்திருத்தத்திற் கடையாளமாகின்றது. நம்முன்னோராகிய தமிழரும் பல்லாயிரவருடங்கட்கு முன்னே தமிழ்ப்பாபாஷையையுடையோராயிருந்ததாகத்தெரியவருகிறது. எக்காலத்துத்தமிழ்ப்பாஷையைப்பெற்றனரோ யார்க்குந் தெரியாது. பரதகண்டத்தின் தென்பாகத்தில் திராவிடரிருந்தனர். பரதகண்டத்து முன்வசித்தோர் திராவிடரென்றும், ஆரியர்இமயமலைகடந்துஇந்தியாவிற்குவந்ததன்மேல் அவர்கள் வடபாகங்களைப் பிடித்துக்கொள்ளத் திராவிடர் தெற்கே வந்தனர் என்றுஞ் சொல்வார். ஆயின் அக்காலத்துத் திராவிடர் யாதுபாஷை பேசினர்களோ யாமறியேம். திராவிடபாஷையெனத் தமிழ், தெலுங்கு, மலையாளம், கன்னடம்முதலிய பலபாஷைகட்கும் பொதுப்பெயராயினும் ஆரியர் பெரும்பாலும் தமிழையே திராவிடமெனக் கூறிவந்த தாகத் தோற்றுகிறது. மற்றுந் திராவிடபாஷைகளைப் பார்க்கிலும் தமிழ்முந்தியதென்பது திண்ணம். தற்கால திராவிடபாஷைகளுக்குமுன் இவை யாவற்றிற்கும்பொதுவான பாஷையொன் றிருந்திருக்கலாம். அது ஆங்காங்கு திருந்திய பொழுது ஓரிடத்தில் தமிழாயும், ஓரிடத்தில்தெலுங்

வாயும், மற்றோரிடத்திற் கன்னடமாயும் மாறு பட்டிருக்கலாம்.

அதுநிற்க, தமிழ் சமஸ்கிருதத்தினின்றும்பிறந்ததென்று சொல்வோர்க்கு விடை யாதென்பிரேல், அவர் அவ்வாறுகூறற்கு நியாயம் யாதென யான் வினவுவேன். சமஸ்கிருதபதங்கள் சில தமிழிலிருந்தால் தமிழ் சமஸ்கிருதத்தினின்றும் பிறந்ததாமா? தமிழ் எழுத்துகளும் சமஸ்கிருத எழுத்துகளும் சிறுபான்மைபொத்திருந்தால் தமிழ் சமஸ்கிருதத்தினின்றும் பிறந்ததாமா? இவை காரணமன்றேல் வேறுயாது காரணம் பற்றியோ? தமிழிலக்கணத்திற்கும் சமஸ்கிருத இலக்கணத்திற்கு மிருக்கும் பேதத்தைநோக்கும்போதே தமிழ்வேறு சமஸ்கிருதம்வேறெனத்தெற்றெனப் புலப்படுமே. இந்தியா முழுவதும் முற்காலத்து ஓரே பாஷை வழங்கி, அப்பாஷை வடபால் பாலியாகவும், தென்பால் தமிழாகவும் திருந்தப், பாலி பின்னுந் திருந்திச் சமஸ்கிருத மாயிற்றெனக் கூறுவோர் கொள்கை சரியெனத்தோற்றுகின்றது. அது சமஸ்கிருதத்திற்கும் தமிழிற்கு முள்ள சம்பந்தங்களை நன்றாய்விளக்கும். இலத்தீனுக்கும் இங்கிலீஷுக்குமுள்ள சம்பந்தமே சமஸ்கிருதத்திற்கும் தமிழுக்குமுள்ளது. ஆயின் இலத்தீனிலிருந்து வந்த சொற்களைநீக்கி இங்கிலீஷ் எழுதுவது கஷ்டமாயிருக்க சமஸ்கிருத பதமில்லாது தமிழிற் காவிய மெழுதுவது சுலபமாயிருக்கின்றது. அதற்குச் சிந்தாமணி, கலித்தொகை முதலிய நூல்களே யான்றவுதாரணமாம். சமஸ்கிருதத்தினால் தமிழ் மிகவுந் திருந்தியது நிச்சயமே. ஆயினுமென்? சமஸ்கிருதம் தெற்கு வருமுன்னேயே தமிழ் மிகவுந் திருந்தியிருந்ததாகத் தோற்றுகிறது. தமிழிலிருக்கும் பழைய நூல்களில் வடமொழிச்சொல் அபூர்வமாய் வருதலே யிதற்கத்தாட்சியாம். திராவிட பாஷைகள் சகலத்தினும் முந்தியது தமிழே. அவைகள் யாவற்றினுஞ் சிறந்ததும் தமிழே. ஆங்கிலேயபாஷையில் அரிவரிவாமுன் தமிழ் திருந்தியபாஷையா யிருந்ததாயின் தமிழ் பழைய பாஷையென்பதற் கத்தாட்சி வேறு வேண்டுமோ?

அதுநிற்க, இப்பாஷைக்குத் தமிழெனும் பெயரெவ்வாறு வந்ததெனச் சற்று விசாரிப்போம். திரவிடம் என்னும் வடமொழிச்சொல் தமிழ் என மரீஇயிற்றென்பார் ஒருசாரார். தமிழ் என்னுமொழியே திரவிடமாயிற்றென்பார் மற்றொரு சாரார். தமிழ் என்னுமொழிக்கு இனிமை யெனு மர்த்தமுண்டாகையால் தமிழ்ப்பாஷையின் இனிமைபற்றித் தமிழெனும் பெயர்வந்ததென்பார் தமிழ்ப்பஷாபி மானிகள். "இதழ், இமிழ், உமிழ், கமழ், கவிழ், குமிழ், சிமிழ், என ழகரப்பேறு பெற்ற பதங்கள்போலத் தமிழ்என்னுஞ் சொல் பொருள் குறித்த தமியென்னும் வினையடியாற் பிறந்து, வினைமுதற்பொருண்மை உணர்த்தியவிகுதிகுன்றித், தனக்கிணையில்லாப் பாஷை என்னும் பொருள் பயப்பது" என்பார் மற்றொரு சாரார், தென்மொழியென்னுந் தொடர்மொழியே, தென்மொழி, தெம்மொழி, தமிழ் என மரீஇயிற்றென்பார் போப் (Dr. Pope) துரையவர்கள். திரவிடம், தமிழ், என்னும்இரு சொல்லும் திரமிடம் என்னும்மொழியிலிருந்து பிறந்தன வெனப் பலநியாயங்காட்டிக் கூறுகின்றனர் கால்ட்வெல் பாதிரியார் (Rev. Caldwell). * இவற்றுட் பின்னைய விரண்டிலொன்றே சரியாயிருக்க வேண்டுமென என் சிற்றறிவுக்குத் தோற்றுகின்றது. ஆகவே யாதுகாரணம்பற்றியோ தமிழ் எனும் பெயருடைய இப்பாஷை, திரவிடபாஷைகளி லொன்றாயும், மற்றைய திரவிடபாஷைகள் யாவற்றிற்கு முந்தியதாயும், அவற்றிற் சிறந்ததாயும், சமஸ்கிருதத்திற்குக் கீழ்ப்படியாததாயும், பல்லாயிர வருடங்களாகத் தென்னிந்தியாவில் வழங்கி வருகின்றது. தற்காலத்து இந்தியாவில் 'குணகடல் குமரி குடகம் வேங்கடம்' எனு நான்கெல்லையுள்ளும், ஈழதேயத்துவடக்குமாகாணம், கிழக்கு மாகாணங்களில் முக்கியமாயும், மற்றைய மாகாணங்களிற் சிறுபான்மையும், இரங்கூன், பினங்கு, சிங்கப்பூர் முதலிய இடங்களிலும், ஆபிரிக்காக் கண்டத்தின் தென் முனையிலும்

* சென்னைத் துரைத்தன பாடசாலைச் சமஸ்கிருதாசிரியர் அப்பர்ட் (Dr. Oppert) துரையவர்கள் இந்தியாவில் முற்காலத்து மள்ளர் எனுஞ் சாதியாரிருந்தனரென்றும், அவர் பாஷைக்கு மள்ளபாஷையென்று பெயரென்றும், அப்பெயர் திருவென்னுமடைசேர்த்து திருமள்ள என்று வழங்கியிருக்க வேண்டுமென்றும், திருமள்ள எனும் பதத்திலிருந்தே திரமிளம், திரவிடம், தமிழ் எனும் மூன்று மொழிகளும் பிறந்தனவென்றுங் கூறுகின்றனர்.

வழங்குகின்றது. ஏறக்குறைய நூற்றுநாற்பத்தைந்து இலட்சம் சனங்களினற் பேசப்படுகிறது. ஏறக்குறைய ஐம்பத்தெண்ணுயிரத்தைஞ்னூறு சொற்களையுடையதாக விருக்கின்றது. இதுவே தமிழாகிய நம்முடைய சுயபாஷை. இதைநோக்குங்காலத்து 'அம்ம! இதன் பெருமைக்கு வேறு அத்தாட்சியும் வேண்டுமோ' எனத் தோற்றுகின்றது. ஆயினும் ஒரு விரலை நீட்டி இதுபெரிதோ சிறிதோவென்பது வினவுழுவாகுமாகையானும், ஓர்ஆயுதம் தகும்தகாதென்பது அது செய்யுந்தொழிலை நோக்கி யாகலானும், தமிழின் பெருமையை நிலைநிறுத்த இன்னுஞ்சற்று விசாரிப்போம்.

ஒருவன் தன் மனக்குறிப்பை மற்றோர்க்கறிவிப்பதற்குப் பாஷை முக்கியகருவியாகின்றது. ஆகவே நமது மனக்குறிப்பை மற்றோர்க்கு எப்பாஷையிற் சுலபமாயும், தெளிவாயும், மதுரமாயும், பலவிதமாக வற்புறுத்திக் கூறமுடியுமோ அப்பாஷையே மிகவுஞ் சிறந்த பாஷையென்றுரைக்கவேண்டும். ஆங்கிலேய பாஷையையுந் தமிழ்ப்பாஷையையு மொத்து நோக்குங்காலத்து இரண்டிற்குமுள்ள தாரதம்மியங் * கரதலாமலகம் போல் தெள்ளிதிற் புலப்படுகின்றது.

ஆங்கிலேயபாஷையிற் சுலபமாகச் சொல்லக்கூடிய தொன்றைத் தமிழிற்கூறுவது மிகவும் வருத்தமாயிருக்கின்றது. ஆயின் அதைக்கொண்டு யாம் தமிழ் எளியபாஷையெனக் கூறத்தகாது. நமக்கோ தமிழ்ப்பாஷை நமது சொந்தப்பாஷையாயிருந்தபோதினும் நன்றாகத் தெரியாது. அநேக † மாணவர்க்கு ஆங்கிலேயபாஷைதெரிந்தளவேனுந்தமிழ்தெரியாது. அது சிலர்தமிழிற் பேசுவோர்க்கு இங்கிலீஷில் விடையளிப்பதிலிருந்தும், தமிழ்பேசும்பொழுதும் ஆங்கிலேய மொழிகளைக் கணக்கின்றிக் கலப்பதிலிருந்தும் காணலாம். அவர்கள் வாசித்த தமிழ் ஆண்டாண்டு சர்வகலாசாலைப் பரீக்ஷைகட்குப் பாடமாக ஏற்படுத்திய பாகங்களே. அவர்களறிந்த தமிழ்ச் சொற்களும் அப்பாகங்களிற் காணப்பட்டவைகளே. ஆகையினால் ஒரு விஷயத்தைத் தமிழிற் கூற முடியாதெனல் அறியாமையாகும். தற்காலத்து நமக்குள்ள அறிவுடன் சொல்லமுடியாத ஒருவிஷயம் இன்னுஞ் சில நூல்களைப் பார்த்தபிறகு சுலபமாகச் சொல்ல முடியலாம். தமிழிலுள்ள நூல்களுள் யாவற்றையுந் தவறாது கற்றுணர்ந்தோரே இவ்விஷயத்தைச்சொல்ல முடியாதென உறுதிபாய்க் கூறலாம். ஆங்கிலேய பாஷையின் நிலைமையைப் பார்த்துப் பிறகு தமிழைப்பார்த்தால் சூரியனைப்பார்த்துப் பின் சந்திரனைப் பார்ப்பது போலாம். சூரியனுடைய பிரகாசத்தினாலே சூரியனைப் பார்த்தவுடன் கண்பொறித் தட்டி மற்றொரு பொருளுஞ் சிறிது நேரம் தெரியாதது போலவே ஆங்கிலேய பாஷையைப் பார்த்தவுடன் அதன் பிரகாசத்தினால் நமது கண் மறைந்து தமிழின் ஒளி தெரியாது போகவுங் கூடும். ஆயினு மிங்கிலீஷளவு தமிழ் சிறந்ததெனக் கற்றறியா மூடருஞ் சொல்லார்.

மண்ணுலகத்து மாந்தரும் மற்றை சீவ செந்துக்களும் பிறந்து வளர்ந்து முதியோராவது போலவே பாஷையும் பிறந்துவளர்ந்து முதிர்கின்றது. எச்சாதியார் சீர்திருந்தி யிருக்கின்றனரோ அவரது பாஷையும் திருந்தியிருக்கும், எப்பாஷை திருந்தி யிருக்கின்றதோ அப்பாஷை பேசுவோருந் திருத்தமுடையோ ரென்பதற் கையமில்லை. ஆங்கிலேயர்க்கும் தமிழர்க்கும் எவ்வளவு பேத மிருக்கின்றதோ அவ்வளவு பேதம் ஆங்கிலேய பாஷைக்குந் தமிழ்ப்பாஷைக்கு மிருக்கின்றது. ஆயிரவருஷ காலமாக ஆங்கிலேயர் எப்படி நாளுக்குநாள் திருந்திக்கொண்டு வருகின்றனரோ அப்படியே அவர் பாஷையு மபிவிர்த்தியாகிக்கொண்டு வருகின்றது. தமிழுந்தமிழர் சீர்திருந்தியகாலத்துத் திருந்தி, அவர் பின்வாங்கத் தானும் பின்வாங்கி, அவருறங்கத் தானு முறங்கியது. ஆகவே தற்காலத்து இங்கிலீஷுக்குந் தமிழுக்கும் அளவிறந்த பேத முண்டாதற்கிடமாயிற்று. நம்மனோர் விழித்தெழுந்து மறுபாஷைகளைக் கற்றுத் தமிழைத் திருத்துவரேல் தமிழுஞ் சிலவருடத்தில் மிகவுந்திருந்துமன்றோ! ஆங்கிலேய பாஷையளவு சிறப்புடைத்தாக வருதற்குத் தடைதானென்னே!

இதுகாறும் தமிழ்ப்பாஷையைப்பற்றிப்பேசினோம்; இனிமேல் தமிழ்ப்பாஷையி லிருக்கும்

* உள்ளங்கைநெல்லிக்கனி (கர + தலம் + ஆமலகம்.)
† மாணுக்கர்.

இலக்கியங்கள் யாவை அவற்றின் குணகுணங்கள் யாவையெனச் சிறிதுவிசாரிப்பேம்.

(இன்னும்வரும்.)

---

## சரீரப்பயிற்சி.

(பி. ஏ. பட்டதாரி ஒருவர் எழுதியது.)

சரீரத்தை இகழ்ந்து, அதைப் பலவிதவருத்தங்களுக்கும் உள்ளாக்கினால், ஆத்துமாவின் நிலையை விருத்திசெய்து சுவர்க்கத்தை அடையலாமென்றஎண்ணம்,நம்மவர்களுக்குள் உள்ள தப்பெண்ணங்களில் ஒன்று. இவ்வெண்ணத்தால் விளைந்த தீங்குகள் பலவற்றையும் நாம் இப்பொழுது அனுபவிக்கிறோம். முதலில், இதைத் தப்பெண்ணம் என்று சொன்னதற்குக்காரணம் கூறவேண்டுமே. "சுவர் இருந்தால்தான் சித்திரம் எழுதலாம்" என்றபழமொழி யாவருக்கும் தெரிந்தது தான். ஆனால் அதன் பொருள் முழுவதையும் சிலர்தான் ஆராய்ந்து பார்த்திருப்பார்கள். நம்முடைய விஷயத்தை ஒட்டிப்பார்க்கின், சுவர் சரீரமாகவும், சித்திரம் ஆத்துமாவாகவும், விளங்கும். இதென்னபுதுமை! சரீரத்தை ஆத்துமாவிலும் சிறப்பித்துக்கூறி, அதை இன்றியமையாத சுவராகவும், ஆத்துமாவை உபகுணமாகிய சித்திரமாகவும் கூறுகின்றீரே என்று சிலர் ஆக்ஷேபிக்கலாம். அப்படியன்று ; சரீரமானது மனிதர்களாகிய நமக்கும், யானைமுதல்பூதக்கண்ணாடியினால் நோக்கினும் அரிதிற்புலப்படும் பிராணிகளீறான அனேக கோடி ஜீவஜந்துக்களுக்கும் பொதுவாயிருக்கிறது. ஆத்துமாவோ, அப்படியன்று; கீழ்ப்பட்ட பிராணிகளுக்கு, நமக்குள்ளதைப்போன்ற ஆத்துமா இருப்பதாக நம்புவதற்கு இடமில்லை ; சித்திரம் இல்லாச் சுவர்கண்டிருக்கிறோம். ஆனால் ஆதாரமாகிய சுவரில்லாச் சித்திரம் கண்டதில்லை; ஆனதினால் தான் சரீரத்தைச் சுவருக்கும், ஆத்துமாவைச் சித்திரத்துக்கும் உவமித்துக் கூறினோம். இதனால்சரீரம் ஆத்துமாவிலுஞ்சிறந்ததென்று நினைக்கவேண்டாம்; கீழ்ப்பிராணிகளுக்கு அப்படியிருக்கலாம். கிடைத்தற்கு அரிய மானிடஜன்மத்தையடைந்த நமக்கு அப்படியன்று. இரண்டையும் ஒரு பண்டியிற் பூட்டப்பட்ட இரண்டு எருதுகளுக்குச் சமானமாய்க் கூறலாம். ஓர் எருதினால் மாத்திரம் அப்பண்டி ஓடாது. அதுபோலவேசரீரத்தை முற்றிலும் இகழ்ந்துஆத்துமவிருத்தியை மாத்திரம் தேடுவதினால் நம்முடைய காரியம் சித்தியாகாது. இரண்டையும் நாம்உடைத்தாயிருக்கிறபடியால்,இரண்டையும் சமமாகப்பாவித்து, விருத்திசெய்ய வேண்டும். ஆதலினால் சரீரத்தை இகழ்ந்து,வருத்தி,ஆத்துமாவைமாத்திரம்விருத்திசெய்வது நம்முடைய புத்திக்கு அழகன்று.

நாம் தப்பு என்று காட்டிய இவ்வெண்ணத்தால் விளைந்திருக்கிற தீங்குகளைப்பற்றிக்கொஞ்சம் பேசுவோம். இத்தேசத்தவர் ஒருவனையும் ஐரோப்பியர் ஒருவனையும் பார்க்கும்பொழுது சரீரபேதம் நன்கு விளங்குகின்றது. பெரும்பான்மையும் ஐரோப்பியர்கள் நம்மவரைப் பார்க்கிலும் உயர்ந்தவர்களாயும், அகன்ற மார்புள்ளவர்களாயும், அதற்குத் தக்க அவயவங்களுள்ளவர்களாயுமிருப்பதோடுகூட, நம்மவர்கள் 'உளி சிறிதாயினும் மலையைப் பெயர்த்துவிடும்' என்று சொல்வதற்கு இடமின்றி, மிகுந்த சரீரபலம் உள்ளவர்களாயுமிருக்கிறார்கள். நாம் மாத்திரம் இரையின்றி ஒடுங்கிச் சுருங்கிப்போன பூனைகள்போலிருப்பதற்கு, இது தவிர்த்துள்ள காரணங்களைப்பற்றி சவகாசத்திற் பேசுவோம். இவ்வெண்ணத்தினாலுண்டாகும்நடக்கை ஒருமுக்கியகாரணம் என்பதற்குச்சந்தேகமில்லை. இதனால் நாம் கெடுவதுமன்றி, அவரைபோட்டால் துவரைமுளையா என்ற பழமொழிப்படி நம்முடையபிள்ளைகளும் பூனைக்குட்டிகளாயிருக்கிறார்களே தவிர புலிக்குட்டிகளாகிறதில்லை. சரீரபலம் அரிதாயிருப்பதால் மனதைரியமும் அரிதாகவே யிருக்கிறது. சரீரப்பாடுபட்டுச் சம்பாதித்துச் சாப்பிடுவது மேற்சாதிகளில் அருமருந்துபோலிருக்கின்றது. ஏழைகள் சத்திரங்களிலும், மடங்களிலுமாவது சாப்பிடுகிறார்கள். வேறுவிதமாய்ப் பிச்சையெடுத்தாவது பிழைக்கிறார்கள்; சரீரப்பாடுபடுகிறதில்லை.

"இரந்து முயிர்வாழ்தல் வேண்டிற்பரந்து
கெடுக வுலகியற்றி யான்"* என்றார் நாயனாரும்.

---

*(இதன் பொருள்.) "இவ்வுலகைப் படைத்தவன், இதன்கண் வாழ்வார்க்கு, முயன்று உயிர்வாழ்தலையன்றி,இரந்தும் உயிர்வாழ்தலை வேண்டி விதித்தானாகின், அக்கொடியோன் தானும் அவரைப் போன்று எங்கும் அலமந்து கெடுவானாக"-பரிமேலழகர்.

இப்படி மானத்தைவிட்டுப் பிச்சையெடுப்பதிலும் சரீரமுயற்சி இழிவானதென்று எண்ணுவது ஏனோ தெரியவில்லை. சரீரத்துக்குப் பலத்தை அளித்து, வாழ்நாட்களைப்பெருக்கி, ஊண் உடை முதலியவற்றிற்கு வேண்டிய பொருளையும் கொடுக்கக்கூடிய சரீர முயற்சிகள் எத்தனையோ இருக்கின்றனவே. உதாரணமாக, தோட்டங்களினால் வரும் பலனை நாம் எல்லோரும் அறிந்திருக்கிறோம். நம்முடைய உணவுக்கு வேண்டிய காய்கனிகளையும், ஊண் சமைப்பதற்கு வேண்டிய விறகுகளையும், கோடைகாலங்களில் குளிர்ந்த நிழலையும், விற்று முதலாக்கக்கூடிய பல பொருள்களையும் கொடுக்கின்றன. அப்படியிருக்க, இவ்வளவு செய்யக்கூடிய ஒரு தோட்டத்திற் பாடுபட்டுச் சுகமாய் ஒருவரை யெதிர்பாராமல் வாழ்வதை விட்டு விட்டு, தோட்டங்களி லுண்டாகும் காய்கனி முதலியவற்றை விலைக்குவாங்கி ஊண்கழிக்கும் தனவான்கள் வீடுகள்தோறும் நாய்போல் திரிந்து பற்காட்டிப் பற்காட்டிப் பிழைப்பது ஏனோ? வேலை செய்வது இழிவென்ற எண்ணம் என்றைக்கு அழியுமோ? அதுவொழிந்தாலன்றோ அதனால் விளையும் தீங்குகள் நீங்கும்.

சரீர முயற்சி அவசியம்; சரீரவிருத்திக்கு முயற்சி அவசியமானது. ஒருவன் எவ்வளவுக்கெவ்வளவு தன் சரீரத்துக்குத் தகுந்த வேலைகளைக் கொடுத்து அவ்வேலைகளால் உண்டாகும் நஷ்டங்களுக்கு ஈடாகப் போதுமான உணவை யளித்துத் தன் சரீரத்தைப்போஷிக்கிறானோ, அவ்வளவுக் கவ்வளவு அவன் தேகம் பலத்தையும், திடத்தையும் பெறும் என்பது யாவரும் தெரிந்திருக்கவேண்டிய விஷயம். இப்பொழுது நாம் பேசுவது சரீரமுயற்சிக் கடுத்த உழவுமுதலிய தொழில்களைச் செய்து பிழைக்கும் கீழ்சாதிகளைப்பற்றி யன்று. கீழ்சாதிகளுக்குச் சரீர முயற்சியிருந்தும் சரீர பலம் அதிகமாக இல்லையே என்று கேட்கலாம். கீழ்சாதிகளைச் சேர்ந்த அநேகர்கள் மிக்க சரீர பலம் உள்ளவர்களாய்த்தா னிருக்கிறார்கள். மற்றவர்களுடைய பலக்குறைவுக்குக் காரணமென்னவெனின், ஊண்பொருட்டு அவசியமாய் அவர் செய்யவேண்டியதா யிருக்கும் வேலைகளால் நேரிடும் சரீர நஷ்டங்களுக்கு ஈடான உணவு அவர்களுக்கில்லை. அவர்களுடைய ஏழமையே பலக்குறைவுக்குக்காரணம். அப்படியிருந்தும் மேல்சாதிகளில் தனவான்களாயிருந்துகொண்டு உண்பதும் உறங்குவதுமே உயிர்வாழ்க்கையின் பண்பென வீண்நாள் கழிக்கும் பருத்த தொந்திப் பண்டாரங்களைப் பார்க்கிலும் அவர்களுக்குப் பலம் அதிகமாயிருக்கிறதென்பது உள்ளங்கைநெல்லிக்கனிபோல் விளங்கும். நாம் பேசுவது ஆகாரத்துக்காக வேலை செய்ய வேண்டியது அவசியமா யில்லாதவர்களைப் பற்றித் தான். அவர்கள் கோபிக்கவேண்டிய தில்லை. அவர்களுடைய நன்மைக் காகத்தான் சொல்லுகிறோம். ஆயுள் விருத்தியைத் தீமையென்று நினையாரென்பது திண்ணம். நாம் சொல்வதெல்லாம் அவர்களுடைய ஆயுள் விருத்தியின் பொருட்டும், அவர்கள் உயிரோடிருக்குமட்டும் நோவின்றிச் சுகமாய் வாழும்பொருட்டுந்தான். அவர்கள் அங்ஙனம் வாழ்வதற்குச் சரீரமுயற்சி அவசியமானது. ஆனால் சரீரமுயற்சி யின்றிமையாத ஏழைசனங்கள் செய்யும் தொழில்களைச் செய்வது தங்களுக்கு இழிவென்று சில தனவான்கள் நினைக்கலாம். அவர்களுக்குத் தக்க சரீர முயற்சிகளைப்பற்றி அடுத்தமுறை பேசுவோம்.

---

## கிருஷிகம்.

### பஞ்சமுண்டாவதேன்?

(வியவசாய வித்தியா சாலையிற் கற்றுத்தேறிய ஒருவர் எழுதியது.)

சிலகாலமாகக் கஞ்சம், கடப்பை, செங்கற்பட்டு, வடஆற்காடுமுதலிய அநேக ஜில்லாக்களில் அடிக்கடி யுண்டாகும் பஞ்சங்களைப்பற்றி எல்லாருக்குந் தெரியும். ஒவ்வொரு விஷயத்தையும் ஆழ்ந்து சிந்திக்கும் ஒவ்வொருவரும் இப்படி யடிக்கடி யுண்டாகும் பஞ்சத்தை நிவர்த்திப்ப தெவ்விதமென நினைத்திருக்க வேண்டும். பஞ்சத்தினாலுண்டாகும் பரிதாப நிலைமையைப்பற்றி நினைக்குந் தோறும் எமது வயிறு பகீர் பகீரென்று பற்றியெரிகின்றது. ஐயோ! எத்தனையோ குடிகள் சாப்பாட்டுக்கு வகையின்றிச் சாகிறதைப் பார்க்கிறோம். கிருஷிகருக்குக் கண்ணுக்குக் கண்ணாயிருக்கும் உழவு காளைகளைக் காப்பாற்ற வகையின்றியும், தங்

களுக்குப் போஷணைக்காக வேண்டியும், குறைந்த விலைக்கு விற்றுப் போடுவார்கள். விதைக்காக வைத்திருக்கும் தானியத்தையும் விற்று தற்கால சாந்தியாக வயிற்றை அரைகுறையாகவாவதுநிரப்பப் பிரயாசைப்படுகிறார்கள். இவ்வளவோடு போனாற் போதாதா? இருக்கிறவீட்டையும் விற்று விட்டு, மிகுந்திருக்கும் பானைசட்டிகளைக் கட்டித் தலைமேல் தூக்கிக்கொண்டு கூலிவேலை செய்து பிழைக்கக் கூடிய விடங்களுக்குப் போவதையும் நாம் கண்டிருக்கிறோம், இராஜாங்கத்தாருக்குக் கொடுக்க வேண்டிய பகுதிப்பணம் கட்டவகையற்றுப் போவதால் சிலசமயம் அந்நிலங்களையவர்கள் வந்தவிலைக்கு ஏலம்போட்டு விடுவதால், பஞ்சநிவர்த்தியான பின் குடிகள் தம் தம் கிராமங்களுக்குத் திரும்பிப்போம்போது அவர்கள் நிலங்களை அயலார் ஆட்சி செய்கிறதைப்பார்த்து, பழைய பிழைப்புக்கும் வழியின்றிப் பரதவிக்கின்றார்கள். ஒரு பகுதியோர் இப்படியிருக்க, மற்றொரு பகுதியோர் அனேகவருஷங்களாக அன்னத்துவேஷமென்னும் வியாதியால் பீடிக்கப்பட்டவர்கள் போல் மிக மெலிந்து எலும்புந் தோலுமாய்க் காணப்படுகிறார்கள். வேலைசெய்யவும் சக்தியற்று, உணவுக்கும் வழியற்று,ஓரிடத்திற் கிடந்தபடியே இறந்துபோவதைக் காணும் எவர்தான் பரிதாபப் படமாட்டார்கள்!! இப்பரிதாபத்தைப் பற்றி எழுதப் புகுந்தால் விரியும்; என்றாலும் பஞ்சத்தினாலுண்டாகும் பல வகைக் கேடுகளை நம்மவர் மனதிற் பதிக்க வேண்டும்.

இப்படி யடிக்கடி யுண்டாகும் பஞ்சத்தைத் தடுத்துக் குடிகளைக் காப்பாற்ற வழியிருக்கின்றதா? என்னசெய்தால் இப்பஞ்சங்களை நிவர்த்திக்கலாம்? அநியாய அரசர்களின் ஆளுகை தவிர்ந்து, உலகப்பிரசித்தமாய் தர்ம துரைகளென்று வழங்கிவரும் ஆங்கிலேயரின் ஆட்சியில் ஆரியவர்த்த மென்னும் இப் பரதகண்டம் வந்தும் வெகுகாலமாயிற்று. ஒரு தேசத்திலிருந்து மற்றொரு தேசத்துக்கும், ஓரூரிலிருந்து மற்றொரு ஊருக்கும் போகத்தகுந்த பாதைகளென்னும் நாமதேயமே யில்லாதிருந்த விடத்தில், எங்கேபார்த்தாலும் புகைவண்டிப் பாதைகளும், படகுகள் பாய் விரித்தோடக் கூடிய பல கால்வாய்களு முண்டாயிருக்கின்றன. தூர தேசங்களுக்குப்போய் வருவது பிரம்மப்பிரயத்தனமா யிருந்தது போய், இப்போது வெகு சீக்கிரத்தில் சுலபமாய் முடியக்கூடியதா யிருக்கின்றது. கிருஷிகர் விளைவிக்கும் தானியங்களின் விலையும் அதிகப்பட்டிருக்கின்றது. தரிசாய்க்கிடந்த அனேக கரம்பு நிலங்களிப்போது பயிர்செய்யப் படுகின்றன. இப்படி யெல்லாமிருந்தும் இத்தேசத்தி லுண்டாகும் பஞ்சந் தொலைய வழியில்லையே! சென்ற இருபது வருஷங்களாய் வருஷந்தவறாமல், ஒரு ஜில்லா தப்பினாலும் மற்றெந்த ஜில்லாவிலாவது பஞ்சமுண்டாயிற்றென்று கேட்காமலிருக்க வில்லையே. இனியென்ன சொல்லலாம்? எக்காரணத்தால் பஞ்சமுண்டாகின்றது ?

முதல், பஞ்சமென்றாலென்னவென்று பார்ப்போம். நிலங்களின் விளைவுமிகக் குறைந்தும், சில விடங்களில் தீய்ந்துபோயு மிருப்பதால், ஜனங்கள் எல்லாருக்கும் அவசியமாய் வேண்டிய உணவுகூடக் கிடையாம லிருப்பது பஞ்சம். இப்படியாவது எதனால்? நமது கிருஷிகரின் தப்பிதமோ? அல்லது தெய்வாதீனமோ? நமது விதிப்பயனோ? எது?

ஏறக்குறைய மூவாயிர வருடங்களாய் நாகரீக மடைந்திருக்கும் நமது முன்னோர்கள் செய்து வந்த காரியங்களாலுண்டான அனுபோகத்தை யடைந்திருக்கிறோம். இன்னமாதம் இன்னதேதியில் இன்னபயிர் இன்னஇன்ன நிலத்தில் விதைக்க வேண்டுமென நமது கிருஷிகருக்குத் தெரியும்; மழை பெய்த வுடன் உழவு வேலைசெய்து நிலத்தைப் பண்படுத்த வேண்டுமென்றும் தெரியும்.பயிர்களுக்கு வேலி போடுவதி லுண்டாகும் பிரயோஜனத்தை நன்கறிந் திருக்கின்றார்கள். சில வகைகளில் ஒவ்வொன்றின் விசேஷத்தையும் பற்றிப் பேசுவார்கள். ஆழஉழுவது நன்மையெனச் சொல்லுவார்கள். சில நிலங்களில் ஆழஉழுவது பிசகென்று அனுபவ பூர்வமாய் அறிந்திருக்கிறார்கள். "ஆறுநாளில் நூறுழவு உழுவதைப்பார்க்கிலும், நூறுநாளில் ஆறுழவு உழுவது மேல்" என்னு மிதுபோன்ற அனேகம் விதிகளைப் பழமொழிகளாகச் சிறுவர்களும் பேசி வருகின்றார்கள். இப்படியிருந்தும், அவர்களுக்குத் தெரிந்த

பல காரியங்களை அனுபோகத்தில் அனுஷ்டானத்துக்குக் கொண்டுவரக் கூடாமல் தடைசெய்யுங் காரியங்கள் அனேக மிருக்கின்றன. நிலத்தைப் பண்படுத்துவதற்குத் தக்க கருவிகளில்லாமை யொன்று; மூடபக்தி மூடவைராக்கியம் மற்றொன்று; திரவியமில்லாமையும், வட்டிக்குக் கடன்கொடுக்கும் செட்டிகளின் தொந்தரவுமாகிய இவைகளும் கூடச்சேர்ந்து கொள்ளுகின்றன. மழை யின்மையா லுண்டாகும் கெடுதியோ எல்லாருக்குந் தெரிந்தே யிருக்கிறது. காலசுபிக்ஷக் குறைவினால் பஞ்சமுண்டாவதாக விருந்தாலும், அப்படி மழைகளுண்டாகாமல் நின்று போவதற்கும் காரணங்களுண்டு. அவைகளையும், பஞ்ச நிவர்த்திக்காக நாம் செய்யவேண்டிய பற்பல காரியங்களையும் அடுத்தசஞ்சிகையிற் கவனிப்போம்.

---

## சரித்திரம்.

(ஒருவர் எழுதியது)

தற்காலத்தில் நமதுபிள்ளைகள் பாடசாலைகளில் வாசிக்கும் பாடங்களென்னென்னவென்று நாம் கவனிப்போமானால் கணிதம் பூமிசாஸ்திரம் தர்க்கம் வானசாஸ்திரமென்னும் பற்பல பாடங்களுடன் சரித்திரமும் ஒரு பாடமாகச் சொல்லுவார்கள். ஒன்றுமறியாத சாதாரண ஜனங்களுக்குச் சரித்திர மென்றால் சாதாரண கதையென்று அர்த்தமாகும்; மற்றும்சிலருக்கு யாதோஒருவரைப்பற்றியும், அவர் பிறப்புவளர்ப்பு முதலிய காரியாதிகளைப்பற்றியும் சொல்லி வரும் பாடமெனப் பொருள்படும். ஆனால், சரித்திரமென்றாலென்ன? அது ஒருவர்மனமிசைந்தபிரகாரம் எழுதிவைத்த கட்டுக்கதையுமல்ல, ஒருமனுஷனைப்பற்றி மட்டும் பேசும் ஜீவியசரிதமுமல்ல, ஆனால் என்னவெனிலோ ஒருதேசத்தைப்பற்றியும், அதன்நிலப்பாங்கு, பட்டினங்கள், கிராமங்கள் இவைகளின் நிலைமை, இவைகளில்வசிக்கும் ஜனங்களின் தன்மை, அவர்களின் பற்பல ஜீவனத்தொழில்கள், இராஜாங்கத்தின்சீர், உத்தியோகஸ்தரின் செயல்கள், தேசத்தின் வர்த்தகநேர்மை, பற்பல அரசரின் சிறப்பு, அயல்தேசத்தரசருடன் செய்யும் யுத்தம், ஜனங்களின் கல்வித்தரம் முதலிய பற்பல முக்கியவிஷயங்களைத் திரட்டிச் சேர்த்திருக்கும் நூலெனச் சொல்லலாம்.

இப்படிப்பட்ட பாடத்தைப் படித்ததனால் பலனென்ன? இன்னகாலத்தில் இன்னதேசத்தை இன்னார் இவ்விதமாய் அரசாண்டார். அத்தேசத்தின்குடிகள் இவ்விதமா யிருந்தார்கள்; என்று நாம் வாசிப்பது நேரப்போக்குக்கு வேறுவழியில்லாமலோ? அல்லது, ஒன்று இரண்டு மூன்று முதலிய எண்ணிறந்த எத்தனையோ விஷயங்களை நாம்வாசித்து நம்முன்னிற்பதித்து வருவதால் புத்தி விசாலித்து ஞாபகசக்தி விரிவர அதிகமாகும் என்பதற்கோ? நமதுதேசத்தாரும், கைத்தொழிலும், வர்த்தகமும், அரசரின் தாராதரமும் இவ்வாறிருக்கின்றது; அயல்தேசத்தின் காரியாதிகள் எப்படி யிருக்கின்றனவென்று அறியவேண்டும் என்னும் வீண் விருப்பத்தின் மிகுதி யாலோ? மற்றெதனால்? யோசிக்க வேண்டும்.

இவையொன்றுமல்ல; நமதுஜன்மத்தின் பலன்வீணாய்ப்போகாமல்பிறருக்குப்பிரயோஜனப்படும்படி நாம் நடந்துகொள்ளவேண்டிய விதமெதுவென்று நமக்குக் கற்பிப்பது சரித்திரம். சரித்திரபுஸ்தகத்தில் எழுதியிருக்கும் ஒவ்வொருகாரியமும் நமது ஜீவகாலத்தில் எப்போதாவது நமக்குப் பிரயோசனப்படாமற் போகாது. எப்படியெனில், திப்புசுல்தான் என்பவரின் பூர்வஸ்திதியென்ன? அவரது பெற்றோர்கள்யாவர்? அவருன்னதபதவியடைந்த மார்க்கமெது? என வாசித்தறியு மொவ்வொருவரும், ஏழையாயிருந்த யாரானாலும் ஒருவன் தன்முயற்சியால் உயர்ந்த ஸ்தானத்துக்கு வரக்கூடும் என்றறிந்து, அப்படி தானுமடக்கப் பிரயாசப்படுவானென்பதில் சந்தேகமில்லை. கொலைபாதகஞ்செய்யக் கொஞ்சமேனும்அஞ்சாமல் குடிகளைச்சஞ்சலப்படுத்தும் கொடுங்கோலரசரின் காரியாதிகளை வாசிப்பவர்களுக்கு ஜனங்களின்மேல் தயாளகுணமும், கெட்ட அரசரின் மேல் வெறுப்புமுண்டாவது சகஜம். தாங்கள் அவ்வரசரைப்போல்கெடுதிசெய்யாமல்நன்மையே செய்யவும் முயலுவார்கள். இதிருக்க, தைரியசாலிகளால் நடத்தப்படும் வீரவைராக்கியச் செய்கைகளை நாம்வாசிக்கையில் நமக்குத்தெரியாமல் நாம் தைரியசாலிகளாவோம். பரோபகாரிகளா யிரு

ந்த பற்பலரின் சமாசாரம் நமக்கெட்டுமானல் நாமும் அப்படியே பரோபகாரஞ்செய்ய விருப்பமடைகிறோம். ஒருதேசத்தின் கைத்தொழிலும் வர்த்தகமும் இப்படிப்பட்டதென்று நாமறிந்தால் நம்தேசத்தின் காரியாதிகளை விர்த்திசெய்துக்கொள்ளத் தகுந்த சாதனமாகவுமிருக்கும். இதுவன்றி ஒருதேசத்தார் முதலில் எப்படியிருந்தார்கள்? அவர்கள் வரவர எப்படி விர்த்தியடைந்து க்ஷேமமாய் ஜீவித்தார்கள்? என்னும்விஷயங்களை நாம் விடாது கவனிப்போமானால் நாம் விர்த்தியடையும்பொருட்டுச் செய்ய வேண்டிய காரியங்க ளென்னவென்று தெளிவாய்விளங்கும். இவ்விதமாகவே ஒரு தேசத்தின் சரித்திரத்தை நன்றாய் அறிந்து கொண்ட ஒருவருக்குண்டாகும் விசேஷவிர்த்தி இவ்வளவென்று சொல்லமுடியாது. இதனல் ஒருவர் அவசியமாய்ப் படிக்கவேண்டிய பலசாஸ்திரங்களில் சரித்திரம் முக்கியமானது. அதிலும் ஒருவரின் சுயதேசத்தின் சரித்திரமோ வெகு முக்கியம். நமது ஸ்திதியை முன்னமே நன்றுயறிந்துகொண்டு அப்பால் நமக்கும் பிறர்க்குமுள்ள பேதாபேதங்களின்னதெனத் தெரிந்து, நமது மேன்மைகளைப்பற்றி ஆனந்தங்கொள்ளவும், நமது தாழ்மைகளையும் குற்றங்களையும் அறிந்து மனங்குன்றி நம்மைச் சீர்படுத்திக்கொள்ளவும் கூடும். ஆகையால், முதல்முதல் நாம் வாசிக்கவேண்டியது இந்துதேசச் சரித்திரம். பள்ளிக்கூடத்தில் வாசிக்கும் மாணுக்கருக்கு மட்டும் சரித்திரம் வாசிப்பது அவசியமெனச் சிலர் எண்ணக்கூடும். என்றாலும் அதுதப்பபிப்பிராயம். விசேஷ கல்வியறிவில்லா தவர்களுங் கூடத் தங்கள்காரியாதிகளைச்சீர்படுத்திக்கொள்வதற்குச் சாதனமாயிருக்கும்சரித்திரத்தைஎல்லாரும் வாசியாதிருக்கலாமா? எல்லாரும் வாசிக்கவேண்டும். இதன்பொருட்டு இந்துதேசச் சரித்திரத்தைக் கொஞ்சங்கொஞ்சமாய் இப்பத்திரிகையில் பிரசுரித்துவருவோம்.

---

## இகபர சுகம்.

இவ்வுலகத்திலுள்ள எல்லா மதஸ்தரிலும் ஓர் பகுதியோர் இகசுகத்தைப் போற்றியும், மற்றோர் பகுதியோர் பரசுகத்தைப் போற்றியும் வருகிறார்கள். எப்படியெனில், ஒருவகுப்பார் "நாமிவ்வுலகத்தில் உண்பது, காண்பது, கேட்பது, முகருவது, ஸ்பரிசிப்பது ஆகிய இச்செய்கைகளா லடையும் சுகத்தைத்தவிர வேறென்ன சுகத்தைக்கண்டோம்" என்கிறார்கள். மற்றொரு வகுப்பார் "சிசி, இதென்ன சுகம்? இதெல்லாம் சிற்றின்பம்; பேரின்பம் என்பது வேறேயிருக்கிறது. அதையடையமுயலவேண்டும். சிற்றின்பத்தில் சற்றும் மனதைச் செலுத்தாமல் பரமாத்மாவைத் தியானித்து வைராக்கியமா யிருந்தால் பரசுகம் வெளியாகும்" என்கிறார்கள். இவ்விருவகையாரில் யார் சொல்வது சரியோ, யார் சொல்வது தப்பிதமோ, அதைக்கண்டு பிடிக்கவேண்டும்.

முதல் முதல் இகமென்றும், பரமென்றும், வெவ்வே றுலகங்க ளிருக்கின்றனவா? என்று பார்த்து, அப்பால் சுகமென்றும் துக்கமென்றும் வெவ்வேறிருக்கின்றதாவெனவும் அறிந்தால் பிற்பாடு நமது முக்கிய வினவாகிய "இகபரசுகத்தை ஒன்றாய் ஒருவரடையக்கூடுமா?" என்பதைத் தீர்மானிக்கலாம். இவைகளைப் பற்றி நாம் யோசிக்கும்போது அனுபவ பூர்வமாய் ஓர் பொருள் இருக்கிறது என்று அறிவதொன்றும், இதின்னபடியா யிருக்கலாமென்று யூகித்து அறிவது ஒன்றுமாக, இவ்விரண்டுகாரியங்களிருக்கின்றன. அவைகளைத்திருஷ்டாந்தங்களால் விவரித்துக்காட்டுவோம். "நாமிப்போது ஜீவிக்கிறோம்" என்பது நமக்கு வாஸ்தவமெனத்தெரிந்தகாரியம். "நாமிறந்துபோனல் மறுபடி ஜனனமெடுப்போம்" என்பது இன்னபடியிருக்குமென்று ஒருவர் கொள்ளும் அபிப்பிராயம். இதுபோலவே, இவ்வுலகத்தில் சிலர் சந்தோஷமாய் ஜீவிக்கிறார்கள் என்பதும், சிலர் விசனத்தோடு காலங்கழிக்கிறார்க ளென்பதும் நமக்கு அனுபவ பூர்வமாய்த் தெரிந்தகாரியம். ஆனல் இவ்வுலகத்தி லிருப்பதுபோலவே மற்றொரு உலகத்தில் அல்லது மற்றொரு ஜன்மத்திலுங்கூட சிலர் சுகமடையவும், சிலர் துக்கப்படவுமாக இருக்கும் என்று சொல்வது, நமக்கு அனுபவ பூர்வமாய்த் தெரியாவிட்டாலும் சில காரணங்களால் யூகித்தறியும் காரியம். "சுரைவிதைத்தால் சுரைமுளைக்கும்" என்பது நமக்கு அனுபவத்தில் தெரிந்தகாரியம். அதேவிதமாய்

இந்த ஜன்மத்தில் அல்லது இவ்வுலகத்தில் நன்மைசெய்தால், அடுத்த ஜன்மத்தில் அல்லது பரலோகத்தில் நாம் சுகமடையலாம், என்பதும்; இந்த ஜன்மத்தில் அல்லது இவ்வுலகத்தில் தீமை செய்தால், அடுத்த ஜன்மத்தில் அல்லது பரலோகத்தில் துக்கப்படுவோம் என்பதும், எல்லாருக்கும் சிற்சில காரணங்களால் தோன்றுகிற அபிப்பிராயம்.

இப்படியாய் இகம், பரமென இரண்டு உலகமிருக்கின்றதென்றும், சுகம் துக்கமென்றும் இரண்டிருக்கின்றதென்றும், நன்மைசெய்தால் சுகமடையலாமென்றும், தீமைசெய்தால் துக்கமுண்டாகுமென்றும், இகத்தில் நாம் எப்படி நடந்துகொள்ளுகிறோமோ அதற்குத் தக்கபடி பரத்திலும் பலன்கிடைக்குமென்றும் அனேகருடைய நம்பிக்கை. இந்த அபிப்பிராயம் சரியாகவே யிருக்கலாம். சரியல்லவென்று தீர்மானமாய்ச்சொல்ல இடமில்லை. ஆகையால் தற்காலத்துக்கு மேற்சொன்னவைகளெல்லாம் இருக்கின்றன வென்று வைத்துக் கொள்ளுவோம். அப்படியானால் இகத்திலும் பரத்திலும் நாமடையக்கூடிய எவ்விதபலனையும் அடையவேண்டியதற்கு வழி யின்னதென்று கண்டுபிடிக்க வேண்டாமா ?

இவ்விஷயம் முக்கியமானதென்று எல்லாரும் அறியவேண்டும். எப்படியெனில், இவ்வுலகத்தைப்போல் மறு உலகம் ஒன்றும், இந்த ஜன்மத்தைப்போல் மறுஜன்மம் ஒன்றுமிருக்குமாகில், நாம் இந்த உலகத்திலும் இந்த ஜன்மத்திலும் எப்படி சுகமடைய வழிதேடுவோமோ, அப்படியே, மறுஜன்மம், மறு உலகங்களில் சுகமடைய வழி யின்னதென்று கண்டுகொள்ள வேண்டியது அவசியமாகின்றதல்லவா ? மேலும் அந்த வழிகளை யுணர்ந்தபின் அவைகளில் நாம் நடத்தலும் அவசியமல்லவா ? சிறுவயதிலேயே இவ்விஷயங்களைக் கவனித்து நல்வழியில் நடவாதவர்களுக்கு இதனால் ஒரு பயனுமிராது. இவ்வுலகத்தில் எத்தனைகோடி ஜனங்கள் தீராத அவஸ்தையுடன் காலங்கழிக்கின்றார்கள் ! எத்தனைபேர் வியாதியில் வருந்துகிறார்கள் ! எத்தனைபேர் சம்பாதித்ததைச் சீக்கிரத்தில் வீண்வழிகளில் செலவழித்துப் பிற்காலத்தில் சாப்பாட்டிற்கு வழியற்று வாடித்திரிகின்றார்கள் ! இவர்களெல்லாம் இகத்தின்பயனை யடைந்தவர்களெனச் சொல்லலாமா ? இகத்தில் சுகமனுபவித்தார்களா? இல்லையே. ஆகையால், இகத்தில் சுகமடையும் வழிகள் யாவை? பரத்தில்சுகமடையும்வழிகள்யாவையென்று ஒவ்வொருவரும் சிந்திக்கவேண்டியது அவசியம்.

நாமிவ்வுலகத்தில் காண்கிற பற்பல காக்ஷிகளால் நமக்குத்தெரிவதென்ன ? ஓர் பக்கத்தில் வியாபாரமும், வியாபாரிகளும், மற்றோர் பக்கத்தில் சமுத்திரத்தில் சப்பலோடுவதும், ஓரிடத்தில் வயல்களில் வேலைசெய்யும் கிருஷிகரும், மற்றோரிடத்தில் யந்திரங்களும் காருகசாலைகளும் அவைகளில் உழைக்கும் கூலியாட்களும், மன உழைப்பு மிகுதியாயுள்ள மந்திரிகளும், பள்ளிக்கூடங்களில் வாசிக்கும் மாணாக்கரும், அவர்களுக்குக் கல்விபோதிக்கும் உபாத்தியாயரும், கலெக்டரும், நியாயாதிபதிகளும், சோம்பேறிகளாய்ப் பிச்சையெடுத்துத் திரியும் பிச்சைக்காரரும், சிறைச்சாலைகளில் வெகுநாளாய் வருத்தமுறும் ஜனங்களும், பொலீஸ்சேவகரும், போர்ச்சேவகரும், குருக்களும், வேர்வைசொட்ட உலையின்முன்னின்று வேலைசெய்யும் கருமானும், சந்தோஷமாயிருக்கும் சிலரும், வியாதியிலழுந்தி அவஸ்தைப் படுகிறவரும், பாலரும் விருத்தாப்பியரும், ஏழைகளும் செல்வர்களும், இன்னும் எவ்வளவோ பேதாபேதங்களும் காணப்படுகின்றன. இவைகளெல்லாம் இருக்கின்றன வென்பதற்குச் சந்தேகமில்லை. இவைபோன்ற எத்தனையோகோடி காரியாதிகள் இவ்வுலகத்தில் நடந்து வருகின்றன. ஆழ்ந்து சிந்திக்கும் ஒவ்வொருவருக்கும் இவைகளிருப்பதாகத் தெரிவது மல்லாமல், அவைகள் ஏதோ சில காரணங்களால் அப்படியாகின்றனவென்று நன்றாய்ப் புலப்படும்.

இவ்வுலகத்தை யுண்டாக்கி நடத்திவரும் ஒரு பரம்பொருள் உண்டென்பது வாஸ்தவமென நம்பினாலும் நம்பாவிட்டாலும், இவ்வுலகத்தில் நடக்கும் காரியங்கள் எல்லாம் ஒருவிதமாகவும், மாறுதலின்றியும் நடக்கின்றன என்பது எல்லாருக்கும்தெரியும். ஏதோசிலஇயல்பு விதிகளுக்கும் பிரமாணங்களுக்கும் இவ்வுலகம் அடங்கி அவ்வாறே நடந்தேறி வருகிறதெனத் திட்டமாய்த் தெரிகிறது. அவைகளைத்

தடுக்கவும் மாற்றவும் எவராலும் கூடாது. அவைகளுக்கு அடங்கி நடத்தல் நமது கடமையாகும். அவ் வியல்பு விதிகள் எவையெனக் கண்டறிந்தால், அதுவே இகபரசுகம் இரண்டையு மடையவேண்டியதற்கு வழி யிதுவென்று காட்டுவதாயிருக்கும்.

இவ்வுலகத்தில் ஒருவர் சுகிக்கவும் மற்றொருவர் துக்கிக்கவும் காரணமென்ன? ஒருவர் பல்லக்கேறிச் செல்லவும் மற்ற நால்வர் அப்பல்லக்கைத் தூக்கிச் சுமந்துபோகவும் காரணமென்ன? ஒருவர் இருந்தவிடத்தி லிருந்து கொண்டே இறகுகொண்டு இரண்டு கடிதங்களெழுதிவிட்டு இரண்டாயிரம் பொன் சம்பாதிக்கவும், மற்றொருவன் நாள்முழுவதும் வெயிலிற் கிடந்து பிரயாசையுடன் உழைத்தும் இரண்டு அணாவும் கிடைப்பது அருமையாயிருப்பதின் காரணம் யாது? ஒருவர் இலக்ஷாதிபதியா யிருந்தும் அவருடைய செல்வத்தை யனுபவிப்பதற்குசந்ததியில்லாமற்போவதேன்? ஒருவருக்கு சமையல் அறையொன்று, சாப்பாட்டறை ஒன்று, சினேகிதரைக்காண ஓர் அறை, படுக்கையறைஒன்று, விளையாட்டாய்க் காலங்கழிக்க ஓர் பங்களா, சாமான்களைச் சேர்த்துவைக்க ஓர் பண்டகசாலை, தோட்டம் துரவு இவையெல்லாம் இருக்க, மற்றொருவருக்கு இருக்கவும் தலைசாய்க்கவும் ஒரு கெஜ இடங்கூட இல்லாம லிருப்பதேன்? இப்படியெல்லாம் இவ்வுலகத்திலுள்ள மனிதரில் ஒருவருக்கும் மற்றொருவருக்கும் இருக்கும் இலக்ஷக் கணக்கான பேதங்களுக்கு முகாந்திரமென்ன? இவைகளை ஆராய்ந்தறிவது இகசுகத்தையடைய வழிகாட்டும். திடீரென நோக்கினால் காரணமொன்றும் தென்படாது. தீரயோசித்தால் ஒவ்வொன்றுக்கும் தகுந்த காரணமிருப்பதாக வெளியாகும். மேலும் இப்பேர்ப்பட்ட காரணங்கள் உலகத்தோர் எல்லாருக்கும் ஓரேவிதமாகவும், மாறுதலில்லாமலும் சம்பவிக்குமெனவும் விளங்கும்.

(இன்னும் வரும்.) J. D. R.

## கற்புநிதி சரித்திரம்.

முற்காலத்தில், புஷ்பபுரம் என்னும் பட்டணத்தில் பங்கயக்கண்ணன் என்று ஒரு அரசனிருந்தான். அவன் தன் பராக்கிரமத்தினால், தன் பேர் கேட்டமாத்திரத்திலேயே அயல் வேந்தர்கள் கிடுகிடென்று நடுங்கும்படி, செங்கோல் செலுத்திவந்தான். அவனுக்கு புரூருவன், துற்குணன் என்று இருவர் மக்கள் இருந்தார்கள். இவர்களிருவரையும், தன் சமீப பந்துவாகிய சம்புமாலி யென்பவனையும் தன் சேனைத்தலைவர்களாக நியமித்திருந்தான். மூவர்களும் சமவயதுள்ளவர்களா யிருந்தபடியால் ஒருவருக்கொருவர் வெகு இஷ்டத்துடனும் சரசத்துடனும் நடந்துகொண்டு வந்தார்கள். மூவர்களுக்கும் கலியாணம் முடிந்திருந்தது. இராசகுமாரர்கள் இருவரும் ஒரே அரண்மனையில் வாசஞ்செய்தபடியால் அவர்களுடைய மனைவிகளிருவரும் ஒருவருக் கொருவர் மிக்க அன்புபாராட்டி சகோதரிகளைப்போ லிருந்தார்கள். ஆனால் சம்புமாலியோ கோட்டைக்கு வெளியே ஓர் அரண்மனையிலிருந்தான். அவன் மனைவிக்குக் கற்புநிதி யென்று பெயர். அவள் பாண்டியதேசத்துச் சேனாதிபதியின் புத்திரி. அத்தேசத்து அக்காலத்து மாதர்களைப்போல் சிறந்த கல்வித் தேர்ச்சியுடையவள். அவளுடைய அழகைப்பற்றி நாம் சொல்லவேண்டியதில்லை. ஆனால் அழகிருந்தென்ன? கல்வியினால் தான் பயனென்ன? நல்லகுணமன்றோ முக்கியமாய் வேண்டியது. குணமில்லா விட்டால் முருக்கின் பூவுக்குச் சமானமேதவிரவேறன்று. அழகுடனும் கல்வியுடனும் குணமும் அமைந்தால், பொன்மலர் நாற்றம் பெற்றதுபோன்றாம். கற்புநிதியின் குணத்தைப்பற்றிச் சொல்லப் புகின் நமக்குத் திருப்தி வருமளவும் புகழ்வதற்கு இடம் போதாது. தன் தாய் தந்தையரிடத்து அளவற்ற பக்தியும் அன்பு முள்ளவளாயும், தன் னுடன்பிறந்தோர், தோழிகள் முதலானவர்களிடத்து மிக்க வாஞ்சையுள்ளவளாயும், தன் கணவனிடத் துக் கரைகாணாக் காதலுள்ளவளாயும், தன் ஜீவகாருண்ணியத்தின் மிகுதியால் "கஞ்சத்தின்(தாமரையின்) அளவிற்றேனும் கடலினும் பெரிய கண்களை" யுடையவளாயுமிருந்தாள். இராசகுமாரர்களின் மனைவிகள் சிற்றின்பப் பிரியர்களாயும், கல்வித்தேர்ச்சி யில்லாதவர்களாயும், பெருமையும் அகங்காரமுமுள்ளவர்களாயு மிருந்தபடியால், அவர்

களுடன் இப்பெண்மணி அதிகமாயப் பழகுகிறதில்லை. மேலும் இப்பெண்மணி இராசவம்சத்தினளாயினும் தன் வேலைக்காரரைக் கருணையுடனும் தாக்ஷிணியத்துடனும் மேற்பார்ப்பதுமன்றி தானும் அவர்களுடன் தன்னாலியன்ற வேலைகளைச் செய்வாள். இப்படித் தன் மனமகிழக் கணவனுடன் கற்புநிதி வாழ்ந்திருக்கு நாளில், ஆப்கானிஸ்தான் தேசத்தை ஆண்டுவந்த ஒரு மிலேச்ச அரசன் அனேக நாடுகளை வென்றுகொண்டு புஷ்பபுரத்தின் பேரிலும் படையெடுத்து வந்தான்; பங்கயக்கண்ணன் அவனுடன் போர்புரியப் புறப்படும்பொழுது சேனைத்தலைவர்களி லொருவனாகிய கற்புநிதியின் புருஷனும் போகவேண்டிய தாயிற்று. அடங்காத் துக்கமுடையவளாயினும் தன்கணவனைச் செல்வதினின்றுந் தடுக்கவில்லை. அவன் புறப்படுமுன், ஜீவகாருணியமுள்ள இப்பெண்மாணிக்கம், தன்கீழுள்ள சேனாவீரர்கள் விண்கொலை, கொள்ளை, பெண்களின் கற்பை யழித்தல், தீயிடுதல் முதலான யுத்தங்களில் நடக்கும் கொடுந்தொழில்க ளொன்றுஞ் செய்யாமல் காத்துக்கொள்வதாகத் தன் நாயகனிடத்திலிருந்து ஓர் வரம்பெற்றுக்கொண்டாள். பின் தன் துக்கத்தையெல்லாம் அடக்கிக்கொண்டு சத்காரியமாகச் செல்லும் தன் புருஷனை சிரித்தமுகத்துடன் வழியனுப்பினாள்.

ஐந்தாம்நாள் பகலெல்லாம் யுத்தம்செய்து களைத்து சாயங்காலம் ஆறுமணிக்கு சேனைத் தலைவர்களாகிய புரூருவன், துற்குணன், சம்புமாலி யென்ற மூவர்களும், உல்லாசமாய் ஓர் கூடாரத்திலிருந்து பேசிக்கொண்டிருந்தார்கள்.

அவர்கள் வீற்றிருந்த கூடாரம் புஷ்பபுரத்துக்கு வெளியே ஓர் காதவழிக் கப்பாலிருந்தது. பல சங்கதிகளையும் பற்றிச் சம்பாஷித்துக் கொண்டிருக்கும்பொழுது ஏதோ தங்கள் மனைவிகளுடைய ஞாபகம் வந்தது. பின்னடந்த சம்பாஷணை யாதெனில்:—

துற்குணன்:—அண்ணா! நம்முடைய மனைவிகளைப்போல் ஒருவரும் கிடையாது, ஆ! ஆ! அவர்களுக்குள் உள்ள அன்பே அன்பு! இருவரும் அப்படியே யிருக்கிறார்களே அவர்களைப்போல எப்பொழுதும் சந்தோஷகரமான மனதையும் சிரித்த முகத்தையு முடையவர்களுமுண்டோ?

புரூருவன்:—நாம் கண்டதிற்குள்ளில்லை. கற்புநிதியைப்பார். பெருங்கவலை யுடையவள்போலும் குதூகுல மற்றவளாயுமிருக்கிறாள். சம்புமாலிக்குக் கோபமோ? இல்லையே? உள்ளதைத் தானே சொல்லுகிறேன். நாம் இல்லாத காலத்து பிரிவாற்றாமையால் விசனமுண்டாவது இயல்பு. ஆனால் நாம்கூடவிருந்தால் ஆனந்தக் கடலில் ஆழ்வதன்றோ தகுதி. அதின்றி, கற்புநிதி நாட்டியங்களிற் சேராமலும், விருந்து தினங்களில் ஒதுங்கி நடந்துகொண்டு மிருக்கிறாள்.

சம்புமாலி:— ஆனால் இப்பொழுது உங்களுடைய மனைவிகள் வெகு விசனத்துடன் அழுதுகொண் டிருப்பார்களோ?

துற்குணன்:—அதற்கும் சந்தேகமோ நாங்களில்லாவிட்டால் அவர்களுக் கெப்படிச் சந்தோஷமுண்டாகும். உன் மனைவிதான் ஒருவேளை சந்தோஷமாயிருப்பாள்.

புரூருவன்:—வீண்வார்த்தை யேன்? போய்ப் பார்த்தால் தெரியுமே. என்றான்

உடனே மூவர்களும் ஒருவருக்கும் தெரியாமல் குதிரைகளின்பேரி லேறிக்கொண்டு புஷ்பபுரத்தை நோக்கிப் புறப்பட்டார்கள்.

நகரத்தையடைந்து வடக்குக் கோட்டை வாசல்வழியாய்க் கோட்டைக்குட் புகுந்து இராசகுமாரர்களினது அரண்மனையைச் சமீபிக்கும்பொழுது சங்கீதசப்தம் காதில் விழுந்தது. விரைவுடன் அருகி, அரண்மனைக்குள் திடீரெனச் செல்ல, எங்கேபார்த்தாலும் புருஷர்களும் பெண்களும் விலையுயர்ந்த ஆடையாபரணங்களை யணிந்துகொண்டு நடனஞ்செய்வதையும், பலவித வாத்தியங்கள் முழங்குவதையும், புஷ்பங்களும் சந்தனம் முதலிய வாசனை திரவியங்களும் கீழெங்குஞ் சிதறிக்கிடப்பதையும் கண்டு வெட்கமுற்று வெறுப்புடன் வெளியே வந்துவிட்டார்கள். கொஞ்சநேரம் ஒன்றுஞ்சொல்லாமல் திகைத்து நின்றபின், துற்குணன் சொன்னதாவது:—

"இதற்கோ நிசிவேளையில் அவசரமாய் வந்தோம்! 'சேலைகட்டிய மாதரைநம்பினால் தெரு

வில்நின்று தியங்கித் தவிப்ப’ ரென்பது நிசமா யிற்றே.’’ என்றான். அதற்கு சம்புமாலி-‘‘நாம றிந்த பொருள் ஒன்றைக்கொண்டு அறியாப் பொருள் யாவற்றையும்பற்றி யொன்று சொல் லுதல் தப்பன்றோ? இரண்டுபெண்கள் நம்பிக் கைக்கு விரோதமாய் நடந்தால் மாதர்களையே நம்பக் கூடாதென்று சொல்லுதல் பொருந் துமோ?

“ பெண்ணிற் பெருந்தக்க யாவுள கற்பென்னும்
திண்மையுண் டாக்கப் பெறின்’’—என்னும்

வள்ளுவர் மொழியை மறந்தனையோ? அல்லது கற்புள்ள பெண்களே கிடையாரென்று நினைத் தனையோ?’’ என்றான்.

துர்க்குணன்:— உலகத்திற் கற்பிருக்கலாம். ஆனால் உன் வீட்டிலும் எங்கள் வீட்டிலும் இல்லையென்பது திண்ணம்.

சம்புமாலி:—ஏன் அப்படிச் சொல்லுகிறாய்? என் மனைவியாகிய கற்புநிதியை இங்கே பார் த்தாயா?

துர்க்குணன்:—இங்கே யில்லாவிட்டால், உன் வீட்டில் இதைவிடப் பெரிய விருந்துகளும் நடனங்களும் செய்துகொண்டிருப்பாள்.

சம்புமாலி:—நான் அவளை யறிந்தமட்டும் அப்படிச் செய்யமாட்டாளென்று நம்புகிறேன். போய்ப்பார்ப்போம் என்றான்.

கோட்டைக்கு வெளியே சம்புமாலியின் அரண்மனை வாயிலில் வந்தவுடன் கதவு தாட் போட்டிருந்தது. நிசப்தமா யிருந்தபடியால் வேலைக்காரர்கள் யாவரும் நித்திரைபோய்விட் டார்களென்று அறிந்தார்கள். சற்றுநேரஞ்சென் றபின் கல்லையும் கனியச்செய்யும் குரலோடு கற்புநிதி கம்பராமாயணத்தில் இராவணனால் தூக்கிக்கொண்டு போகப்பட்ட சீதாதேவியி னது புலம்பலைப் பாடினாள்:—

“செஞ்சே வகனார் நிலைநீர் தெரிவீர்
மஞ்சே! பொழிலே! வனதே வதைகாள்!
‘அஞ்சேல்’ எனநல் குதிரேல் அடியேன்
உஞ்சால் அதுதான் இழிபோ உரையீர்’’

(செஞ்செசவகனார் = இராமர்; மஞ்சு = மேகம்; பொழில் = தடாகம்; அஞ் சேல் = பயப்படாதே; நல்குதிரேல் = சொல்வின்; உஞ்சால் பிழைத்தால்.)

அவளுடைய தற்கால நிலைமைக்கு அப் பாட்டின் பொருத்தத்தைக்கண்டு வியந்து, கத வைத் திறக்கச்சொல்லி சம்புமாலி உட்செல்ல, கற்புநிதி ஆனந்தபரவசமானாள். இராசகுமாரர் களிருவரும் அதிக வெட்கத்தை யடைந்து வெளியே நின்றார்கள். பிற்பாடு மூவரும் திரும் பியுத்தகளத்திற்கு வந்து விட்டார்கள். நாம் இது வரையில் இராசகுமாரர்களது குணத் தைப்பற்றி யொன்றும் சொல்லவில்லை. நம்மு டைய விஷயத்துக்கு துர்க்குணனைப்பற்றி மாத் திரம் சொன்னாற்போதும். அவனுக்கு அப்பெ யரே தக்கது. கற்புநிதியினது நடக்கையைப் பார்த்ததுமுதல் அவன் பொறாமை கரைகடந் துபோய் விட்டது. துர்க்குணருக்கு சற்குண ரைக்கண்டாற் பொறாமையுண்டாவது இயல் பே. முடியுமானால் அவர்களுடைய நற்குணத் தைத் தங்களாலானமட்டுங் கெடுக்க முயற்சி செய்வதும் துர்க்குணரது சுபாவந்தான், அன் றியும் துர்க்குணன் இதற்கு முன்னமேயே கற்பு நிதியினுடைய அழகைக்கண்டு மயக்குற்றவனா யிருந்தான். இந்தக்காரணங்களால் அவள் கற் பை யெப்படியாவது அழித்துவிட வேண்டு மென்ற எண்ணத்துடன் மறுநாள்இரவில் சாம நேரத்துக்குப் பின் ஒருவரும் அறியாமற் புறப் பட்டு நடுநிசியில் புஷ்பபுரத்துக்கு வந்து சம்பு மாலிவீட்டின் கதவைத் தட்டினான். ஒரு தாதி கதவைத்திறக்க, இராசகுமாரன் அவசரமான இராச்சிய காரியமாய் புஷ்பபுரத்துக்கு வந்த தாயும், கோட்டைக் கதவுகள் அடைத்தாய் விட்டதினால் இரவுதங்கிப்போக அவ்வீட்டுக்கு வந்ததாயும், கற்புநிதிக்குச் சொல்லி அனுப்பி னான். அப்பெண்மணி இப்பாவியின் எண்ணங் களை அறியாளாய், தன் பிராணநாயகனது சிநேகிதனும், சமீப பந்துவுமான துர்க்குணனது வரவைக்கேட்டு மகிழ்ந்து, எழுந்துவந்து உப சரித்து, தன்நாயகனது க்ஷேமத்தையும் வீரச் செயல்களையும்பற்றிப் பலவாறு வினவிக் களி த்த பின்பு, அவ் விராசகுமாரன் நித்திரை செய்வதற்கு வேண்டிய ஏற்பாடுகளைப் பற்றி வேலைக்காரருக்குச் சொல்லி விட்டு, அந்தப் புறத்திலுள்ள தன் ஏகாந்த சயனத்துக்குச் சென்றாள். பள்ளியறையில், தன்நாயகனது கீர்த்தியைப் பரவச் செய்து, காப்பாற்றி, தன்னிடம் அவரை சீக்கிரம்கொண்டு சேர்க்கு ம்படி கடவுளைப் பிரார்த்தித்தபின், அப்பெண் மணி நித்திரைபோனாள். கொஞ்சநேரம் தூங்கி

யானபின் துர்சொப்பனங்களால் திடுக்கிட்டு விழித்தாள். விழிக்கவே, தன் கட்டிலருகே உருவின வாளுடன் தன்னால் மேன்பட்ட அதிதியென்று உபசாரம் செய்யப்பட்ட துற்குணன் நிற்பதைக் கண்டாள். முதலில் கூச்சலிடக் கூடநாக்கு எழவில்லை. பூனையைக்கண்ட கிளியைப்போல் குழறியழுதாள். பின்பு மனதைக் கொஞ்சம் தேற்றிக் கொண்டு, கட்டிலைவிட்டுக் கீழேயிரங்கி ஒருபக்கமாய் நின்றுகொண்டு,

"இராசகுமாரரே! இந்த வேளையில் அந்தப்புறத்தில் நான் தனிமையாய் நித்திரைசெய்யும் அறைக்கு வரவேண்டியதென்ன?" என்று கேட்டாள். அதற்கு துற்குணன்:— "கரும்புத் தோட்டத்துக்குள் மதம்பிடித்தயானை செல்வதற்குக் காரணம் சொல்லவும் வேணுமோ" என்று கேட்டான்.

"காய்ந்தன சலாகையன்ன உரைவந்து கதுவ முன்னம்
தீய்ந்தன செறிகள் உள்ளம் திரிந்தது சிவந்தசோரி
பாய்ந்தன கண்கள் என்றும் பரிந்திவள் உயிர்க்கும் பெண்மைக்
கேய்ந்தன அல்லாவெய்ய மாற்றங்கள் இனையசொன்னாள்."

—கம்பன்.

[சலாகை = நாராசம்; கதுவுதல் = பற்றுதல்; சோரி — இரத்த மழை; உயிர்க்கும் — பெருமூச்சுவிட்டாள்; மாற்றம் = சொல் ]

கற்புநிதி அடங்காக் கோபங்கொண்டு.—

"அடே துஷ்டா! நான் தனித்திருக்கிறேனென்று தகாதவார்த்தைகளெல்லாம் பேசுகிறாயோ? என் பிராணநாயகரிதை யறிந்தால் உனக்கு என்னகதி அமையுமென்பதைப் பற்றிச் சற்று யோசித்துப்பார். தனித்திருந்தாலென்ன? கற்பரசியாகிய தமயந்தியினால் வேடன் எரிபட்டு நீறானது அறியாயோ? உன் பாழான எண்ணங்களை யொழித்துவிடு.

"மற்றொருவர்க்காய் மனைவாழும், தாரங்கொண்டார் என்றிவர் தம்மைத்தருமம் தான், ஈருங்கண்டாய்"

வீணாகக் கெட்டுப் போகாதே என்றாள். அது கேட்ட துற்குணன, பின்னும் பெரும் பொருள், ஆடையாபரணங்கள், அரசாட்சி முதலிய வற்றைப் பற்றிப் பேசியும் இகழ்ச்சியே பதில் கிடைப்பதைக் கண்டு கோபங்கொண்டு, வாளாற் கொன்றுவிடுவதாகப் பயமுறுத்தினன். கற்புநிதி, தன் தலையணையின் கீழ் காவலுக்காக எப்பொழுதும் வைத்திருக்கும் உடைவாளைத் திடீரென்று எடுத்து உருவிக்கொண்டு, தன் வேலைக்காரர்கள் விழிக்கும்படி கூச்சலிட்டாள். துற்குணன் ஒன்றும் தோன்றாமல் திகைத்து நிற்கையில், கதவைத் திறந்துகொண்டு வேலைக்காரர்களும் தாதிகளும் ஓடிவந்தார்கள். தங்கள் எஜமானி நிற்பதையும் துற்குணன் நிலையையுங் கண்டு, குறிப்பறிந்து, துற்குணனைப் பிடித்துக் கட்டிக்கொண்டு சிலர் போக, சிலர்கற்புநிதியின் கட்டளையை எதிர்பார்த்திருந்தார்கள். உடனே கற்புநிதி கொஞ்சம் கோபம்அடங்கி வாளை எறிந்துவிட்டு தன் கணவனை உடனே யழைத்துக்கொண்டு வரும்படி சேவகர்களை அனுப்பினாள். அப்படியே சூரியோதயமாய் கொஞ்சநேர மானவுடன் சம்புமாலி வந்து சேர்ந்தான். கற்புநிதி தன் நாயகனிடத்தில் நடந்தவைகளை எல்லாம் சொல்லி, கட்டுண்டு அடைபட்டிருந்த சண்டாளனையும்காட்ட, சம்புமாலி இராசகுமாரனைக் கடினமான காவலில் வைத்துவிட்டு, சங்கதிகளை அரசனுக்குத் தெரிவித்தான். நீதியினின்று தவறாத அரசன்

"தன்குற்றம் நீக்கி பிறர்குற்றம் காண்கிற்பின்
என்குற்றம் ஆகும் * இறைக்கு?"

என்னும் வள்ளுவர் வாக்கை மனதிற் கொண்டு தன்மகனை சிரச்சேதஞ் செய்து விடும்படி உத்தரவு செய்தான்.

"தினைத்துணையாம் குற்றம் வரினும் பனைத்† துணை
கொள்வர் பழி நாணுவார்" [யாக்

என்பது பொய்யாமோ? ஆனால் கற்புநிதி இத்தண்டனையைக் கேட்டவுடன், தன்னால் ஒருவனுக்கு மரணம் வருவதைக்குறித்து விசனம் அடைந்து அரசனை மரணதண்டனையை நீக்கி விடும்படி வேண்டிக் கொண்டாள். சம்புமாலியும் வெகுகால நேசத்தை நினைத்து இரங்கி, மரண தண்டனையை நீக்கும்படி அரசனைப் பிரார்த்தித்தான். அப்படியே அரசன் மரண தண்டனையை நீக்கினபோதிலும், துற்குணன் தன்னாட்டி லிருந்தால் கேடே விளையுமென்று நினைத்து, அவனுக்கு சொற்ப திரவியம் கொடுத்து தேசத்துக்கு வெளியே எங்கே யாவது போகும்படி துரத்தி விட்டான். "அடாதது செய்தார் படாததுபடுவார்." பின்பு கற்புநிதியும் சம்புமாலியும் வெகுநாள் சுகமாய் வாழ்ந்து கொண்டிருந்தார்கள். கற்புநிதியினது கற்பின் சிறப்பும், தயாளகுணமும் இன்றைக்கும் புகழ்ந்து பேசப்படுகின்றன.

பேரேரீ.

* இறை—அரசன். † துணை—அளவு.

## ஆரியதர்மம்.

ஆரியதர்மமானது கியான கர்மங்களை அடங்கியதாயிருக்கிறது.

கியானமாவது:—

1. ஆண்டவர் ஒருவர்தான்.

2. சகலசிருஷ்டியும் அவரால் செய்யப்பட்டது. ஆகையால், அவர் நம்முடைய தந்தையாயிருக்கிறார்.

3. அவர் எவ்விடத்திலும் உள்ளவர்.

4. அவர் எல்லாவற்றையும் காண்பவர்.

5. அவர் சக்திக்கு அளவு இல்லை.

6. அவர் எல்லாமறிந்தவர்.

7. அவர் நம்மை எல்லோரையும் காப்பாற்றுகிறார்.

8. நம்முடைய தாய் தந்தையர்களைப் பார்க்கிலும் அதிக அன்புடன் நம்மை வளர்க்கிறார்.

9. சரீரத்தையும், புத்தியையும், நம்மைச் சுற்றியுள்ள எல்லாவற்றையும் நாம் சுகமாக இருக்கவேண்டுமென்றே அவர் நமக்குக் கொடுத்திருக்கிறார்.

கர்மங்களாவன:—

1. நம்முடைய தந்தையின் பிரஜைகளாகிய நாம் எல்லோரும் ஒருவரோடொருவர் அன்புடன் கூடி நடக்கவேண்டும்.

2. மற்றவர்களுடைய சுகத்தைப் பார்த்து சந்தோஷத்தையும், துக்கத்தைப் பார்த்து துக்கத்தையும் நாம் அடையவேண்டும்,

3. எந்த ஜந்துவினிடத்திலும் கொடுமை செய்யக்கூடாது.

4. உண்மை பேசவேண்டும்.

5. இல்லாதவர்களுக்குக் கொடுக்க வேண்டும்.

6. எல்லாரிடத்திலும் கிருபை யுள்ளவர்களாயிருக்க வேண்டும்.

7. எந்தவிஷயத்தையும் நீரயோசிக்கவேண்டும்.

8. எல்லாருக்கும் ஆதித்தியம் செய்யவேண்டும்.

9. ஒருவருடைய சொத்தையும் அபகரிக்கக்கூடாது.

10. ஒருவருக்கும் தீங்கு செய்யக்கூடாது.

11. பெரியோர்கள், தேவதைகள், ரிஷிகள் முதலியோரை வந்திக்க வேண்டும்.

12. வித்துவான்களை கௌரவிக்கவேண்டும்.

13. அன்னியர்களுடைய தப்பிதங்களைப் பார்த்து கோபியாமலிருக்க வேண்டும்.

14. டம்பமாயிருக்கக்கூடாது.

15. இதரரை ஈனமாய் எண்ணக்கூடாது.

16. தாய் சகோதரி இவர்களிடத்தில் மரியாதையோடும் பிரீதியோடும் நடக்கவேண்டும்.

17. பொதுவில் ஸ்திரீ ஜாதியை மரியாதையோடு நடத்தவேண்டும்.

18. ஆசாரியரை மரியாதையோடு நடத்தவேண்டும்.

19. செய்யவேண்டிய கடமைகளைக் கிரமமாகச் செய்யவேண்டும்.

20. சுத்தமாயிருக்கவேண்டும்.

21. ஆஹார விஹாரங்களில் கிரமமாயிருக்க வேண்டும்.

22. கிரந்தங்களைச் செவ்வையாய்ப் படிக்கவேண்டும்.

23. நல்ல நடைத்தையுடன் இருந்து கடவுளை பஜிக்கவேண்டும்.

24. முடிவில் பிறருக்கும், தனக்கும், ஆண்டவருக்கும் செய்யவேண்டிய கடமைகளைச்சரியாய் செய்யவேண்டும்.

இந்த கட்டளைப்படி நடந்தால், இகலோகத்திலும் பரலோகத்திலும் சுகம் அடையலாம்.

மொத்தத்தில் இதரர்களுக்கு தீங்குசெய்யாமல் தான் சுகமடையும் பொருட்டுச் செய்யவேண்டிய எல்லாவற்றையும் செய்யவேண்டும். எல்லாருக்கும் நன்மை செய்வதையே கற்கவேண்டும். ஆண்டவனைத் தொழவேண்டும். சகல ஜந்துகளுக்கும் நன்மை செய்யவேண்டும். ஆண்டவர் நமக்கு நன்மை செய்வார்.

இரகுநாதராவு.

# பத்திரிகாசாரம்.

## விசேஷக்குறிப்புகள்.

**“அறிவைப் பரவச் செய்வதற்கான ஏற்பாடு.”**

அறிவைப் பரவச் செய்யும் சபை(ஏஜன்ஸி) யார் வெளிப்படுத்திய வரலாற்றுப் பத்திரிகையில் கண்டிருக்கும் “அறிவைப் பரவச் செய்வதற்கான ஏற்பாடு” இன்னதென்று யாவருக்கும் விளங்க அவ்வேற்பாட்டுச் சுருக்கத்தைஇப்பத்திரிகையின் கடைசியில் பிரசுரித்திருக்கிறோம். இவ்வேற்பாட்டைகனம்பொருந்திய ஜஸ்டிஸ் முத்துசாமி அய்யர் அவர்கள் முதலாகப்பார்வையிட்டுக் காரியசாத்தியமானதென்றும், காரியத்தில் நிறைவேற்றப்பட்டால் ஜனங்களுக்குஅதிகநன்மை பயக்குமென்றும்மேலான அபிப்பிராயம்கொடுத்திருக்கிறார்கள். இவ்வேற்பாடுகாரியத்தில் நிறைவேறி விர்த்தியடைவதைக் கனம் பொருந்திய கவர்னர் முதலாக அதிசிரத்தையோடு நோக்கிவருவார்கள். கனம்பொருந்திய கவர்னர் வென்லாக் பிரபு அவர்கள் இச்சபை (ஏஜன்ஸி) யார் வெளிப்படுத்திய விண்ணப்பத்தை மிகப் பிரீதியோடு படித்துப் பார்த்து, ஜனங்களுக் கறிவையூட்டி அவர்கள் நிலைமையைச் சீர்படுத்த வேண்டுவதவசிய மென்பதைப் பற்றி இச்சபையாரோடு முற்றும் ஒருமனப் பட்டவராயிருக்கிறாரென்றும், ஆகையால் இவ்வேற்பாடு காரியத்தில் விர்த்தியடைவதை அதிக சிரத்தையோடுநோக்கி வருவாரென்றும் சொல்லி அவர் அந்தரங்ககாரியதரிசியைக்கொண்டு ஷை சபை (ஏஜன்ஸி) காரியதரிசிக்குக் கடிதமெழுதுவித் திருக்கிறார்.

---

**பத்திரிகை பரவவில்லையே!**

இந்த “அறிவைப் பரவச் செய்வதற்கான ஏற்பாடு” அம்பல மேறு முன் ஒரு நிருப நேசர் “நமது நாட்டில் பத்திரிகைகள் கிராமங்கள் தோறும் பரவ வில்லையே! அதின் குணம் இன்னதென்று கிராமாந்திரங்களின் ஜனங்களுக்குப் போதித்த போதிலும் கவனிக்கமாட்டேன் என்கிறார்களே!...” என்று சொல்லிப் பரிதபித்துப் புலம்பிப் பத்திரிகைகளுக் கெழுதினர். அவர் சொன்னது வாஸ்தவமே. நமது நாட்டார் பத்திரிகையின் பயன் இன்னதென்றும் அதை விடாது படித்துவருவதால் விளையும்நன்மை யின்னதென்றும் நன்றாய் அறிய வில்லை தான்.

---

**“கரும்பு தின்னக் கூலி”**

கிராமாந் திரங்களில் பத்திரிகையைப் பரவச் செய்வதைப்பற்றி “இதற்கு எந்த வித முயற்சி யெடுத்த போதிலும் கரும்புதின்னக் கூலியும் கொடுப்பதுபோலிருக்கிறதே” என்று அவர் சொன்னதும் ஒருவாறு வாஸ்தவமே. ஆனால் அதற்கு என்ன செய்கிறது! திடீரென்று கிராம வாசிகளை யெல்லாம் பத்திரிகைகள் வாங்கிப் படிக்கும்படி செய்வது முடியாத காரியமாம். பத்திரிகைகள் பரவி விர்த்தியாவது ஜனங்களுள் கல்வி பரவி யிருப்பதற்குத் தக்கபடி யிருக்கும். அப்படிப் பார்த்தாலும் நமது நாட்டில் கல்வி பரவி யிருப்பதற்குத் தக்கபடி பத்திரிகைகள் பரவி யிருக்கின்றனவோ வென்றால், அதுவும் இல்லை. பிரதமவித்தை பரவச் செய்வது எத்தேசத்திலும் சர்க்காருடைய கடமை. அதற்குமேல் பொதுவிஷய அறிவும் உயர்தரக்கல்வியும் பரவி யபிவிர்த்தியாவது ஜனங்கள் கவர்ன்மெண்டார் இருவரும் சேர்ந்து ஒருவருக்கு ஒருவர் ஒத்தாசையாக வுழைப்பதால் ஆகவேண்டுமேயன்றி இருவரில் எவர் முயற்சி குன்றினும் காரியம் பலிக்காதாம்.

---

**பாடசாலைகளும், பத்திரிகைகளும்.**

கவர்ன்மெண்டார் மேற்சொன்ன கொள்கையை மேவிட்டே உயர்தரக் கல்வி யபிவிர்த்தி வேலையினின்றும் கொஞ்சம் கொஞ்சமாய் விலகி அவ்வேலையை அந்தரங்கநபர்கள் வசத்தி லொப்புவித்துஅதற்கு அவர்கள் “கிராண்டு” கொடுத்துக் கொஞ்சம் சகாயம் செய்வதே தங்கள் கடமையாக நினைத்து நடந்து வருகிறார்கள். கல்வி யபிவிர்த்தி விஷயத்தில் பாடசாலைகளைப்போல் பத்திரிகைகளும் காரியத்திற் கிசைந்த ஓர் கருவியேயாம். அங்ஙனமாக, பத்திரிகைகளைப் பரவச்செய்ய ஒத்தாசை செய்வதும் கவர்ன்மெண்டார் கடமைகளில் ஒன்றேயாம். பத்திரிகைகள் பரவிப் பலப்படப்பட ஜனங்களுக்கு அறிவும் ஞானமு மகன்று அவர்கள் சுதந்திரத்தை யதிகப்படுத்திக் கொள்ளவும் அதிகாரிகள் அக்கிரமத்தை யடக்கவும் சக்தியுள்ளவர்களாக ஆகிறார்கள். இதனால் பத்திரிகைக ளதிகமாகப் பலப்படப் பார்ப்பது கொடுங்கோற் பிரியரான சில அதிகாரிகளுக்குப் பிரியமாயிருக்கிறதில்லை. இது இத்தேசத்தில் மட்டு மல்ல. இங்கிலாந்திலு மிப்படியே நடந்து வந்தது. ஆனால் அந்தக் காலங்களெல்லாம் இப்பொழுது போயின. இத்தேசத் துத்தியோகஸ்தர்களில் சிலர் அப்படியிருந்தாலும் கவர்ன்மெண்டார் பத்திரிகைகளுக்குதவிசெய்வது அவர்கள் கடமையே.

---

**கவர்ன்மேண்டார் உதவி.**

நமது கவர்ன் மெண்டார் ஒரு விதமாகப் பத்திரிகைகளுக்கு உதவியும் செய்து வருகிறார்கள். அவ்வுதவி பத்திரிகைகளுக் குபயோகமான சமாசாரங்களைக் கொ

டுத்துதவுவதிலும் பத்திரிகை விர்த்தியாவதற்கு வேண்டிய சாதகங்களை யமைத்துக் கொடுப்பது முதலான இவ்விதங்களிலும் புரியப்பட்டு வருகிறது. இவ்வழிகளில் அவர்கள் செய்யத்தக்கது இன்னும் எவ்வளவோ இருக்கிறதாயினும் இதுவரையில் செய்திருப்பதை மறப்பது நன்றன்று.

---

**ஜனங்களுக்கு அக்கரை வேண்டும்.**

பத்திரிகை ஜனங்களுக்குள் பரவி விர்த்தியடையவேண்டுமானுல்ஜனங்களுக்கே கொஞ்சம் அக்கரை யிருக்கவேண்டும். ஜனங்களுக்கு அக்கரை யில்லா விட்டால் அவர்கள் பத்திரிகைகளை வாசித்துப் பயன்படுவதெப்படி? குதிரையைத் தண்ணீர்த் துறைக்குக் கொண்டுபோக நம்மாலாகும், அது மனதுவைத்துக் குடித்தாலன்றி அதைக் குடிக்கும்படிசெய்ய முடியுமோ? அதுபோல கிராமஜனங்களுக்குப் பத்திரிகைகளை வாசிக்க வேண்டுமென்கிற அக்கரை யில்லா விட்டால் கவர்ன்மெண்டாரும் மற்றவர்களும் செய்யும் உதவி என்னத்திற் காகும்?

---

**விவேகிகள் கடமை.**

ஜனங்களில் விவேகிகளா யிருப்பவர்மட்டும் இக்காரியத்தில் அவர்கள் கடமையை யுணர்ந்து அக்கடமைப்படி நடக்க இசைந்து முன்வருவார்களானுல் ஆளுக்குக் கொஞ்சமாக இதுவிஷயத்தில் எவ்வளவோ நன்மை செய்து விடலாம். அதற்குமட்டும் மற்ற ஜனங்களுக்கு அக்கரை யிருக்க வேண்டாமா? அதுதானே யில்லையென்று ஆத்திரமாய்ப் பதில்சொல்லத் துடிப்பார்கள் சிலர். அதற்கு நாம் அவர்கள் கேட்குமுன்னே பதில் சொலுல்கிறேும்.

---

**கரும்பின் உபமானம்.**

தற்காலம் கிராமாந்திரங்களிலுள்ள ஜனங்களு மற்ற சாமான்ய ஜனங்களும் பத்திரிகை வாங்கி வாசிப்பதில் அக்கரை யற்றிருக்கி ருர்களென்பது வாஸ்தவமென்று நாம் முன்னமே ஒப்புக்கொண்டோம். ஆனுல் அவர்கள் அக்கரையற் றிருப்பது, பெரும்பாலும் அவர்களுக்கு இதுவிஷயத்தில் அக்கரையூட்ட ஒருவரில்லாததினுலேயே யன்றி வேறல்ல. கரும்பின் உருசி தெரியாத ஒரு மனிதனிடம் சென்று இந்தக் கரும்பைத் தின்னப்பா நன்ருயிருக்குமென்ருல், அவன், ஆகா என்று உடனே வாங்கித்தின்பானே? “இதென்னடா! ஏதோ மரம்போலிருக்கும் கொம்பைக் கொண்டுவந்து கொடுத்து இதைத் தின்றுபார் உருசியாக விருக்குமென்கிருன். இவன் ஏதோ வீணில் வேலையற்று நம்மைவேடிக்கைசெய்யப்பார்க்கிருன்” என்றுதான் சொல்வான். அவன்முன் கரும்பின் உருசி தெரிந்த சிலர் அதைத்தின்று சக்கையை உமிழ்ந்து ஆ! ஹ! எவ்வளவு தித்திப்பா யிருக்கிறதென்று நாக்கைத் தட்டிச் சந்தோஷப் படுவார்களானுல், அதைப் பார்த்திருக்கும் அந்நியனும், இதென்ன! இவர்கள் இந்த வெறும் கொம்பைத் தின்று இவ்வளவு சக்கையை யுமிழ்ந்து தித்திக்கிறதென்று நாவைத்தட்டி யானந்திக்கிருர்களே! இதில் ஏதோ இருக்கிறதுபோ லிருக்கிறது. அதைப் பார்ப்போமென்று” தானுக அதைத் தின்றுபார்க்க முயலுவான். அப்படிபோல ஒவ்வொரு கிராமத்திலும் பத்திரிகையின் குணத்தையறிந்தவர்கள் ஒன்றுகூடி ஒரு ஏற்பாடுசெய்து முயற்சித்தால் அனேகமாய் ஒவ்வொரு கிராமத்திலும் பத்திரிகை பரவும்படி ஏற்பாடு செய்யலாம்.

---

**வித்தியா விஷயக் கூட்டங்கள்.**

சென்ற மார்ச்சு ஏப்ரல் மாசங்க ளிரண்டிலும் வித்தியா விஷயமாகக் கூடிய கூட்டங்கள் பல. இந்தக் காலத்தில் அபிஷியல் வருஷம் முடிந்து புதுவருஷமாரம்பிப்பதோடுவித்தியாஸ்தாபனங்கள் முதலியனவும் வருஷ உற்சவம் கொண்டாடும் காலமாக விருக்கிறது. இவ்வுற்சவங்கொண்டாடுங்காலங்களில் சாதாரணமாக மிகவும் உந்நத பதவிகளிலிருப்பவர்கள் அக்கிராசனத்தை வகிக்கவாவது, உபந்நியாசம் செய்யவாவது அழைக்கப்படுவதுவழக்கமாதலால் முக்கியமான பல விஷயங்களைப்பற்றிப் பிரதமஸ்தர் சொல்லும் அபிப்பிராயங்கள் இக்காலத்தில் சாதாரணமாக வெளியாவது வழக்கம், இந்த வருஷம் இப்பேர்ப்பட்டவிஷயங்களில் மிகவிசேஷமாய்க் கவனித்துப் பேசப்பட்டது வித்தியாவிஷயமாம். இதன்முக்கியத்துக்கேற்க இது உயர்பதவியிலும் அதிகாரத்திலுமுள்ளவர்களால் விசேஷகவனஞ்செலுத்திப் பேசப்பட்டது நம் மனதுக்குச் சந்தோஷத்தைத் தருவதாயிருக்கிறது.

---

**கிறிஸ்தியன் காலேஜ் வருஷோற்சவம்**

சென்னையிலுள்ள கிறிஸ்தியன் காலேஜ் என்னும் வித்தியாசாலையின் வருஷமகோற்சவம் கொண்டாடப்பட்ட காலத்தில் கனம்பொருந்திய கவர்னர் அக்கிராசனதிபதியாக விருக்க அழைக்கப்பட்டார். அந்த ஸ்தானத்திலிருந்து அவர் பேசவேண்டிநேரிட்டதில் வித்தியாவிஷயத்தைப்பற்றிப் பலவாறு சிந்தித்து அவர் அபிப்பிராயத்தை வெளியிட்டார்.

---

**சரீரப்பயிற்சியின் முக்கியம்**

கனம்பொருந்திய கவர்னர் அச்சமயம் அக்கிராசனத்திலிருந்து பேசினதில் சரீரப்பயிற்சி செய்ய வேண்டியதின் முக்கியத்தைப்பற்றி மிகவற்புறுத்திப் பேசினுர்.

'கிரிக்கெட்' என்னும் பந்து விளையாட்டு சரீரப்பயிற்சிக்கேற்றதென்று அதைப்பற்றி மெச்சி சென்னை மைதானத்தில் வித்தியாசாலைகளில் படிக்கும் மாணாக்கர்கள் பலர் அப்பந்து விளையாட்டில் பிரியம் வைத்தாடிப் பழகுகிறதைப்பார்க்க அவருக்குச் சந்தோஷமாயிருக்கிறதென்று சொன்னார். ஏனென்றால் "தேகாப்பியாசம் செய்து சரீரதிடத்தை விர்த்தி செய்யாமல் மனப்பயிற்சி மாத்திரம் செய்து மூளையைமாத்திரம் விர்த்திசெய்யப்பார்த்தால் எந்தச்சாதியையும் விர்த்திக்குக்கொண்டுவருவது கூடாதகாரிய" மென்று அவர் மிகவும் உண்மையாய் நம்புவதாகச் சொன்னார். இது வாஸ்தவமே. 'கிரிக்கெட் என்பது ஆங்கிலேயர் மிகவும் பிரீதி வைத்துள்ள ஆண்மையும் தைரியமும் தரும் விளையாட்டு. ஆங்கிலேய சேனாதிபதிகளிலெல்லாம் மிகப் பிரக்கியாதி பெற்ற வெல்லிங்கடன் பிரபு 'ஆங்கிலேயர் போர்முகத்தில் பெற்ற வெற்றிகளெல்லாம் அவர்கள் 'கிரிக்கெட்' பந்து விளையாடுவதில் பெற்ற வலியாலும் தைரியத்தாலுமே அவர்களுக்குக் கிடைத்தன' என்று சொன்னார். கிரிக்கெட்டைப்போல் சிறந்த வெளியில் ஓடியாடி உக்கிரமாய் விளையாடத்தக்க சுதேச விளையாட்டுகளுமிருந்தன. அவையெல்லாம் அப்பியாசமின்றி விடப்பட்டனவால் இத்தலைமுறைவாலிபர்களுக்கு அவையின்னவென்று கூடத்தெரியாமற் போய்விட்டன.

---

## சுயபாஷைப் பயிற்சியைப் பற்றி மிஸ்டர் க்ரிக் சொல்லியது.

சென்னை வித்தியாபிவிர்த்தி யிலாகாத்தலைவர் மிஸ்டர் எச். பி. க்ரிக் எம். ஏ. அவர்கள் சென்ற மார்ச்சுமீ 31௳ வியாழக்கிழமை சென்னை கல்விச் சங்கத்தில் நூதனமாய் வித்தியாப் பட்டம் பெற்ற வித்தியார்த்திகளுக்குச் செய்த பிரசங்கத்தில் சுயபாஷைப்பயிற்சியைப்பற்றிப் பின்வருமாறு உருக்கமாய்ப் பேசிப்பிரசங்கித்தார்:—

"உங்கள் கடமை இங்கிலீஷ்ப் பாஷையைப் பயின்று மேற்றிசையாருடைய எண்ணங்கள் அபிப்பிராயங்களையெல்லாம் அறிந்து கிரகித்துக்கொள்ள வேண்டியது மட்டுமல்ல. நீங்கள் கற்ற கல்வியையும் உபயோகமான அறிவையும் பரவச்செய்ய வேண்டுமென்கிற விருப்பம் உங்களுக்கிருக்கிற துண்மையானால் நீங்கள் கற்றுக் கிரகித்துக்கொண்ட விஷயங்களை உங்களுடைய சொந்த பாஷையில் வழக்க நடையில் தீரமாகத் தெரிவிக்கும் சக்தியிருக்கவேண்டும். அந்தச் சக்தி யுள்ளவர்கள் உங்களில் வெகு சொற்பமாக வாவதிருப்பார்களோ வென்றுஐயமுறுகிறேன். சாஸ்திர சம்மந்தமான கருத்துகளையும் விஷயங்களையும் பற்றி ஜனங்களுக்கு அவர்கள் சுயபாஷையில் சொல்லிக் கொடுப்பதால் தற்காலம் அதிக நன்மை விளையச் செய்யலாமென்று எண்ணுகிறவர்களில் நான் ஒருவனல்ல. ஏனென்றால் சாதாரண ஜனங்களுக்கு மேல்தேசத்தார் கண்டு பிடித்து அனுஷ்டித்து வரும் சாஸ்திரசம்மந்த மானவிஷயங்களைப் பற்றிச் சுயபாஷையில் சொல்லிக்கொடுக்கத் துவங்குமுன் அந்தஜனங்களை, அவர்கள் சுயபாஷையிலே மேல்தேசத்தார் முறைப்படி கல்வி கற்பித்துப்பழக்கவேண்டும். அப்படிப் பழக்கா விட்டால் அவர்கள் நீங்கள் சொல்வது எவ்வளவு இனிமையாக விருந்தபோதிலும் காதுகொடுத்துக் கவனித்துக் கேட்டுப் பயன்படத்தக்கவர்களாக மாட்டார்கள். ஆனால் இப்படி மேற்றிசை முறைப்படி வித்தை போதிக்கப்பட்டுப் பழகினவர்கள் தொகை இப்பொழுது அதிகமாகிக் கொண்டுவருகிறது. அவர்களுக்கு உங்களுக்குத் தெரிந்தவற்றில் உபயோகமான அறிவைப் பரவச்செய்ய அவர்களை நோக்கிச் சுயபாஷையில் பேச உங்களுக்குச் சக்தியிருக்கவேண்டும். ஐரோப்பாவில் புத்தி விவேகமும் செல்வாக்கு சிரேஷ்டமுமுள்ள மனிதர்களுடைய எண்ணங்கள் அபிப்பிராயங்களெல்லாம் மொழிபெயர்த்து ஜனங்களுக்கு அவர்கள் பிறந்து வளர்ந்த சொந்த பாஷையில் எழுதிப்பிரசரிக்கப்பட, அதனால் ஜனங்களின் வாழ்வு நடைகளும், உயரெண்ணங்கள் அபிப்பிராயங்களும் மாறுபட்டு நூதனமான வழக்கங்களும் ஏற்பாடுகளும் தலை யெடுக்கத் துவங்கினது போல், இத்தேசத்திலும் அவ்விதமாக நேரக்காணினும் காணலாம். இந்தியாவிலுள்ள ஜனங்கள் அவர்களுடைய பலவேறுபட்ட பாஷைகளோடு பதவியிலும் செல்வத்திலும் எப்போதாவது உந்நத ஸ்தானத்துக்கு வரவேண்டுமானால் அவர்களுள் இங்கிலீஷ்ப் படிக்கத் தெரிந்த ஜனங்கள் இப்பொழுதிருப்பதைவிட ௧0-அல்லது ௨0-மடங்கு அதிகமாகவிருக்கவேண்டும். இவ்வளவு அதிகமான இங்கிலீஷ் தெரிந்த ஜனங்கள் ஆண், பெண்ணாகிய இருபாலாரிலு மிருக்கவேண்டு மென்பது எனது உறுதியான அபிப்பிராயம். ஆனால் பெரும்பான்மையான சாமான்ய ஜனங்கள் சீர்பட்டு மறு ஜனனம் கிடைத்தது போல் விர்த்தியாக ஒவ்வொரு சுயபாஷையும் இங்கிலீஷ் பாஷை மூலமாகக் கற்கப்படும் கல்வி யறிவை அச் சொந்த பாஷையில் தெள்ளிதாகத் தெரிவிக்கக்கூடியபடி விர்த்தியாக வேண்டிய தவசிய மென்பதும் நான் தீரமாய் நம்பும் உறுதியான விஷயமாய் இருக்கிறது. சுய பாஷைகள் இப்பொழுதிருக்கிறபடி மேற்றிசை வித்தை சம்மந்தமான விஷயங்களையும் எண்ணங்களையும் விள்ளத் தெரிவிக்க இசைந்ததாக விர்த்தியாகி யிருக்

கிறதாகத் தெரியவில்லை. சாஸ்திர சம்மந்தமான சிறு புஸ்தகங்களைச் சுயபாஷை யொன்றில் மொழி பெயர்க்கும்வேலையை மேற்பூண்டு யத்தனித்தோரே அதிலுள்ள கஷ்டங்களை யறியவல்லார். அந்நிய பாஷையிலுள்ள் விஷயங்களையும் கருத்துகளையும் சுயபாஷைகளில் தெரிவிப்பது எவ்வளவு கஷ்டமாக விருந்தபோதிலும் அவ்வேலையைச் செய்தே தீரவேண்டிய தன்றி வேறு விதியில்லை. ஏனெனில் வரவர விர்த்தியாகும் தென்னிந்தியாவி லுள்ள லக்ஷக்கணக்கான சாமான்ய ஜனங்கள் எப்போதாவது இங்கிலீஷ்ப் பேசத்தக்கவர்களாவார்க ளென்றாவது, அவர்கள் படித்து அறிவை விர்த்தி செய்து கொள்ள அங்கிலேய பாஷையிலுள்ள புஸ்தகங்களைப் பார்த்துக் கொண்டிருப்பார்க ளென்றாவது எண்ணுவது சுத்த முட்டாள்தனமே. சுயபாஷையி லெழுதப்பட்ட பத்திரிகைகளும், சிறு புத்தகங்களும், துண்டுக் காகிதங்களும் தமிழில் வரவர எவ்வளவு அதிகமாக வேண்டியிருக்கின்றனவென்ப தொன்றினாலே ஜனங்கள் அவர்கள் சுயபாஷையில் ஏதாவது வாசிப்பதற்கு வேண்டுமென்று விரும்புகிறார்களென்பதும், இவ்விருப்பம் வரவரப் பரவி வருகிறதென்பதும் பிரத்தியக்ஷமாக விளங்கும். கனவான்களே! உங்களிடத்துள்ள கல்விச்சுடர் வெளிச்சத்தில் சிலகிரணங்களாவது உங்களிடமிருந்து சென்று சுற்றியுள்ள இடங்களில் பரவி அறியாமை யென்னும் காரிருளால் மூடப்பட்ட மாந்தர்க்கு விவேக வெளிச்ச முண்டாகச் செய்யவேண்டு மென்றால் நீங்கள் கற்றவற்றை உங்கள் சுயபாஷையில் இலகுவும் தெளிவுமான நடையில் எழுதுவதற்கு வேண்டிய அளவு சுயபாஷையில் விற்பத்தியடையத் தவறாதேயுங்கள்.''

---

## பள்ளிக்கூடச் சம்பளங்கள்.

சென்னைக் கவர்ன்மெண்டார் இவ்விராஜ தானியிலுள்ள பள்ளிக்கூடங்களில் பிள்ளைகளிட மிருந்து பள்ளிக்கூடச் சம்பளம் வாங்குவதைப்பற்றி நூதனமாய்ச் சில விதிகளேற்படுத்தி, இந்த வருஷம் ஜனவரிமீ கஉ யி லிருந்து அவை யூர்ஜிதத்துக்கு வரத்தக்கனவாக விளம்பரம் செய்திருக்கிறார்கள். இப்புது விளம்பரம் டிசம்பர்மீ ௩௦-ந்தேதிபோட்டு ஜனவரிமீ ௫உ கெஜட்டில் முதல் முதல் வெளியிடப்பட்டது. டிசெம்பர்மாசக் கடைசியோடு காலஞ் சென்ற "ஸ்கூல்பீரோடிபிகேஷன்'' என்னும் நிர்ப்பந்த ஏற்பாடு கஅஅ௫ ஜனவரிமீ ககவ பிறப்பிக்கப்பட்டது. இக்கொடிய விதி ஊர்ஜிதத்தி லிருந்த சென்ற ௫-வருஷ காலமாக இதனால் வித்தியாபி விர்த்திக்கு விளைந்த இக்கட்டுகள் இடையூறுகள் இவ்வள வவ்வளவில்லை. இப்பொழுது காலஞ்சென்ற பழைய விளம்பரப்படி கவர்ன்மெண்டுதவி பெறுவதற்காக வித்தியாபி விர்த்தியிலாகா தாரரால் அங்கீகரித் தேற்றுக்கொள்ளும்படி விரும்பும்பாடசாலைக ளெல்லாம் அவ் விளம்பரத்தில்கண்ட விகிதப்படி பிள்ளைகளிட மிருந்து சம்பளம் வசூல் செய்ய வேண்டிய தவசியமென்று ஏற்படுத்தி நிர்ப்பந்தித்ததால் அந்தரங்க நபர் முயற்சியா லங்கங்கே தலையெடுக்க ஆரம்பித்த சுதேச பாடசாலைகள், பிள்ளைகளிட மிருந்து பெற்றோரால் கொடுத்து நிர்வகிக்கக்கூடாத விகிதப்படி சம்பளம் வாங்கவேண்டிய தாகவாவது, இல்லாவிட்டால் கவர்ன்மெண்டார் உதவியின்றிப்பாடசாலையை நடத்த வேண்டிய தாகவாவது நேரிட்டது. இதில் எந்தவழி போனாலும் வில்லங்கமே விளைவதாயிருந்ததால் நூதனமா யேற்பட்ட பாடசாலைகள் இந் நிர்ப்பந்தத்தில் தலைதூக்கி நிற்கமாட்டாமல் கைவிடப்பட்டுக் கலைந்துபோயின. இழுத்துப் பறித்துக் கொண்டு நின்ற மற்றப் பாடசாலைகளில் அனேகம் இவ் வில்லங்கஸ்திதியி லிருந்து தப்பித்துக் கொள்ள பொய்க்கணக்கு, பொய்ரிஜிஸ்தர் வைத்துப் பிள்ளைகளிடம் குறைந்த சம்பளம் வாங்கி, வித்தியாபி விர்த்தியிலாகாதாரர் பார்வைக்கு அவர்கள் விதித்த விதிப்படி தனிக்கணக்கு, தனிரிஜிஸ்தர் ஜோடித்துக் காட்டுவதுமாகப் பொய் புரட்டுச்சொல்லி யேமாற்றிப்பிழைத்து வந்தன. இந்த வீண் நிர்ப்பந்தத்தால் விளைந்த தீங்குகளும், நடந்த பொய்புரட்டு, மோசங்களும் கொஞ்ச மில்லை. ஸ்கூல் மானேஜர் முதல் பள்ளிக்கூடத்து வாத்தியார், பள்ளிக்கூடத்துப் பிள்ளைகள், அவர்கள் பெற்றோர்கள் வரையில்எல்லாரும் சேர்ந்து பொய் சொல்லவும் மோசம் செய்யவும் பயில வேண்டியதாகவிருந்தது. இவ்விதியால் வித்தையை அபிவிர்த்தி செய்ய ஏற்பட்ட இலாகாவில் கவர்ன்மெண்டார் பொய் புரட்டு மோச மிவற்றை யதிகம் அபிவிர்த்திசெய்து வந்தார்கள். அவ் விளம்பரத்தின் கொடுமையையும் அதனால் விளையும் தீங்கையும் பற்றி ஜனங்களும் மற்ற வித்தியாவிற்பன்னர்களும் முறையிட்டுக் குறை கூறியதற் கெல்லாம் கவர்ன்மெண்டார் காது கொடா திருந்தமையால், இத்தேசத்தார் அவர்கள் வழக்கப்படி இதுவும் தலைவிதியே என்று சும்மா இருந்து விட்டார்கள். இவ்விளம்பரத்துக்குக் குறித்த ௫-வருஷ ஆயிசு கழிந்ததும் கவர்ன்மெண்டார் தாங்களாகவே முன் வந்து ஒரு விளம்பரத்தால் இக் கெடுவிதியை யடியோடே துடைத்து விட்டது அவர்களுக்குக் கீர்த்திதரத்தக்கதே. இந்நூதன விளம்பரத்தால் கவர்ன்மெண்டார் இதற்கு முன் இது விஷயமாய்ப் பிறப்பித்த விளம்பரங்களை யெல்லாம் ரத்துசெய்துவிட்டு, வித்தியாபிவிர்த்தி யிலாகாதாரரின் சொந்த விசாரணையிலாவது, முனிசிபாலிடிகள் லோகல் போர்டுகளின் விசாரணையிலாவதிருக்கும் காலேஜு

கள், ஹைஸ்கூல்கள், மிடில்ஸ்கூல்கள், ப்ரைமெரிஸ்கூல்கள் அல்லது அவற்றிற்குப் புதிதா யேற்பட்டிருக்கும் பேரின்படி, 'அப்பர் செகண்டரி' லோயர் ஸெகண்டரி, 'ப்ரைமெரிஸ்கூல்' டிபார்ட்மெண்டுகள் ஆகிய இவற்றில் வசூல்செய்யப்படவேண்டிய சம்பள விகிதங்களை மட்டும் குறைந்தது இவ்வளவாக விருக்கவேண்டுமென்று ஏற்படுத்திவிட்டு, மற்ற சுதேச, மிஷனரி பாடசாலைகள், காலேஜ்கள், எல்லாவற்றிலும் அந்தந்த ஸ்கூல் மானேஜர்கள், அல்லது விசாரணைக்கர்த்தர்கள் யுக்தப்படி சம்பளம் வாங்கப் படலாமென்று விட்டிருக்கிறார்கள். கவர்ன்மெண்டு அல்லது முனிசிபல் லோகல்போர்டு பாடசாலைகளிலும் மிகவும் பின்னடைந்த இடங்களிலுள்ளவற்றில் குறைந்த சம்பளம் வாங்க கவர்ன்மெண்டார் விதிக்கலாமென்று கண்டிருக்கிறது. அந்தரங்க நபர்கள் விசாரணையி லிருக்கும் பாடசாலைகளில் வசூல்செய்யப்படும் சம்பளம் அப்பாடசாலை மானேஜர்களின் யுக்தப்படிக்கு விடப்பட் டிருக்கையில் அவ்வித பாடசாலைகளுக்கு "கிராண்ட்-இன்-எய்ட் கோடு"ப்படி கவர்ன்மெண்டார் திரவிய உதவி செய்வதற்காக அப் பாடசாலைகளின் வருமானம் அப் பாடசாலைகளினுள்ள மாணாக்கர்களின் மொத்தத் தொகையை யறிந்து அவர்களிடமிருந்து கவர்ன்மெண்டார் ஏற்படுத்தி யிருக்கும் பிரமாண விகிதப்படி சம்பளம் வசூல்செய்தால் என்ன ஆகுமென்று பார்த்து, வரும் தொகையில் ௧௦௦-ல் ௧௦ விகிதம் தள்ளுபடி செய்து நிர்ணயிக்கப்படும். அப்படி வரும் தொகையின் பேரில் கவர்ன்மெண்டார் கிராண்ட் இன்- எய்ட் கோடில் கண்ட விதிகளின்படி கிராண்டு கொடுப்பார்கள். இப்புது ஏற்பாட்டுப்படி கவர்ன்மெண்டார் சம்பளம் வசூல்செய்ய விதித்திருக்கும் விதி யென்னவென்றால் காலேஜ்களிலும், 'அப்பர் செகண்டெரி' 'லோவர்செகண்டெரி' டிபார்ட்மெண்டுகளிலும் படிக்கும் மாணாக்கர்கள் சம்பளம் செலுத்த ஸ்கூல் வருஷம் கோடைகால விடுமுறை, மாரிகால விடுமுறை ஆகிய இவ்விரு விடுமுறைகளால் பிரிக்கப்பட்ட இரண்டு பகுதியாக வகுக்கப்பட்டிருக்கிறது. ஒரு பகுதி யல்லது ௬-மாசத்துக் குரிய சம்பளம் ஒருதடவையிலாவது பலதடவைகளிலாவது செலுத்திவிட வேண்டும். இப்படி ௬-மாசத்துக்குக் குறைந்து மாசவாரியாகச் சம்பளம்வாங்கப்படமாட்டாது, ப்ரைமெரிஸ்கூல் டிபார்ட்மெண்டில் மட்டும் மாசவாரி சம்பளம் வாங்கப்படும். மேற்படி உயர்தர டிபார்ட்மெண்டுகளில் வாங்கப்பட வேண்டிய பகுதி சம்பளம் பகுதியாரம்ப முதலிலே செலுத்தப்படவேண்டும். பலதடவைகளில் செலுத்துவதா யிருந்தால் முழுதும் செலுத்தினாலன்றி மாணாக்கர் பேர் ரிஜிஸ்தரில் வைத்துக்கொள்ளப் படமாட்டாது. எந்தப் பகுதியிலாவது, சம்பளம் பாக்கிவிழுந்துபோய், அப்புறம் சிலகாலம் கழித்து அம்மாணாக்கர் மறுபடியும் பள்ளிக்கூடத்தில் சேரவருவாரானால், பழம்பாக்கியோடு அம்மாணாக்கர் பள்ளிக்கூடம் விட்டதேதிமுதல் சேரவிரும்பும் தேதிவரையிலு முள்ள பகுதிகளுக்கும், சேரப்போகிற வருஷப் பகுதிக்கு முள்ள சம்பளங்களைச்சேர்த்துக்கொடுத்த பிறகு தான் சேர்த்துக் கொள்ளக்கூடும். ப்ரைமெரி ஸ்கூல்களில் ஒவ்வொரு மாசத்துச் சம்பளமும் முன்னதாகவே வாங்கி விடப்படும். ஒருமாசத்தில் குறைநாள் எதாவதிருந்தால் அதற்கும் முழுமாசச் சம்பளமே வசூல் செய்யப்படும். காலேஜ்களிலும் ஹைஸ்கூல் களிலும் வருஷப்பகுதி சம்பளம் ஒரே தடவையாகவாவது ௪-தடவைகளாகவாவது வாங்கப் படலாம். ஒரேதடவையிலானால் பள்ளிக்கூடம் திறந்த மூன்றும்நாளுக்குள்ளும் ௪-தடவைகளிலானால் முதல்தடவை மேற்குறித்த தவணையிலும் அடுத்த மூன்று தடவைபாகமும் அடுத்து வரும் ப்ரைமெரி ஸ்கூல்களில் அந்தந்தமாசம் ௧௫-௨க்குள் வசூலாய் விடவேண்டும். மூன்றுமாசங்களில் அந்தந்த மாசம் ௧௫-ந்தேதிக்குள்ளும் செலுத்தப்பட வேண்டும். மேற்குறித்த தவணைகளில் செலுத்தத் தவறினால் ரூபாய்க்கு ௨-அணுவுக்கு அதிகப்படாமல் அபராதம் விதிக்கப்படும். அப்புறம் ௧௦-நாளாகு முன்னும் பணம் செலுத்தப்படாவிட்டால் மாணாக்கர் பேர் ரிஜிஸ்தரிலிருந்து அடித்துவிடப்படும். மறுபடியும் சேர்த்துக் கொள்கிற தாயிருந்தால் இதற்குமுன் செலுத்த வேண்டிய எல்லாத் தொகைகளோடு ரூபாய்க்கு ௪-அணுவுக்கு அதிகப்படாமல் அபராதமும் செலுத்த வேண்டு முன் மாணாக்கர் யாராவது ஸ்கூலைவிட்டுப்போனால், வாசிக்காத நாளைக்குச் சம்பளத்தைத் திருப்பிக் கொடுக்கும்படி கேட்க பாத்தியமில்லை. ஆனால் ஸ்கூல் அதிகாரிகள் இஷ்டம் வைத்தால் வாசிக்காத நாளைக்குள்ள சம்பளத்தைத் திருப்பி விடலாம். கவர்ன்மெண்டு விசாரணையிலும், முனிசிபாலிடி லோக்கல் போர்டார் விசாரணையிலு முள்ள பாடசாலைகளுக்குக் கவர்ன்மெண்டார் விதித்திருக்கும் பிரமண விகிதம் பின் வருமாறு:—

| காலேஜ் டிபார்ட்மெண்டு. | | ஒருவருஷப்பகுதிக்குச்சம்பளம். | |
|---|---|---|---|
| | | ரூ. | அ. |
| எம். ஏ. பரீக்ஷைக்கு | | 20 | 0 |
| பி. ஏ-க்கு எல்லாப்பாடங்களுக்கும் | ... | 36 | 0 |
| ,, பாஷைப்பிரிவுக்கு மட்டும் | ... | 18 | 0 |
| ,, விஷய பிரிவுக்கு மட்டும் | ... | 20 | 0 |
| எப். ஏ-க்கு | ... | 30 | 0 |

| செகண்டரி டிபார்ட்மேண்டு. | | ரூ. | அ. |
|---|---|---|---|
| 6-வது பாரம் அல்லது வகுப்பு | ... | 19 | 0 |
| 5-வது ,, ,, | ... | 17 | 0 |
| 4-வது ,, ,, | ... | 15 | 0 |
| 3-வது ,, ,, | ... | 11 | 0 |
| 2-வது ,, ,, | ... | 9 | 0 |
| 1-வது ,, ,, | ... | 7 | 0 |

| ப்ரைமெரி டிபார்ட்மேண்டு. | | மாசம். | |
|---|---|---|---|
| 4-வது ஸ்டாண்டார்ட் | ... | 0 | 12 |
| 3-வது ,, ,, | ... | 0 | 9 |
| 2-வது ,, ,, | ... | 0 | 6 |
| 1-வது ,, ,, | ... | 0 | 4 |
| குழந்தைகள் ,, ,, | ... | 0 | 2 |

| ப்ரைமெரி இங்கிலீஷ் ஸ்கூல்கள். | | | |
|---|---|---|---|
| 4-வது ஸ்டாண்டார்ட் | ... | 0 | 8 |
| 3-வது ,, | ... | 0 | 6 |
| 2-வது ,, | ... | 0 | 3 |
| 1-வது ,, | ... | 0 | 2 |
| குழைந்தைகள் ,, | ... | 0 | 1 |

இவ்விகிதங்கள் குறைந்த விகிதங்களாதலால் இதற்கு மேற்பட்டு எந்தஸ்கூல்களில் வேண்டுமானாலும் வசூல் செய்யலாம். இவ்விதிப்படி சென்னை ப்ரெஸிடென்ஸி காலேஜின் சம்பளம் இவ் விகிதத்தை விட க00-க்கு கடு அதிகமாக உயர்த்தி ஏற்படுத்தப்பட்டிருக்கிறது. காலேஜ் டிபார்ட்மெண்டிய ஸ்கூல் வருஷப் பகுதி யாரம்பத்தில் ஒரே தடைவையாகச் செலுத்தி விடுகிறவர்களுக்கு மேற்குறித்த தொகையில் ஒரு ரூபாய் குறைத்து வாங்கிக் கொள்ளப்படும். சுதேச பாஷாபாடசாலைகள் பாலிகாபாடசாலைகள் இவற்றிற்கு இவ்விதிகள் எதுவும் ஏற்காவாம்.

---

### "இந்தியன் மாகஸின் அண்ட் ரிவியூ."

"நாஷனல் இந்தியன் அஸ்ஸோஸியேஷன்" சங்கத்தார் "இந்தியன் மாகஸின் அண்ட் ரிவியூ" என்னும் மாதாந்தரப்பத்திரிகையொன்று பிரசுரித்துவருகிறார்கள். அப்பத்திரிகை ஒரு பாரம் 8-ப் பக்கமுள்ள புஸ்தக ரூபமாய் மாதந்தோறும் லண்டனில் அச்சிட்டுப் பிரசுரிக்கப்பட்டு வருகிறது. அதில் அச்சங்கத்தார் நோக்கத்துக் கிசைந்த விஷயங்கள் பல பிரசுரிக்கப்பட்டு வருகின்றன. ஷை சங்கம் இந்தியாவில் கல்வி யபிவிர்த்தி, ஜன சீர்திருத்த விர்த்தி யிவைகளுக் கனுகூலமாக ஏற்பட்டுழைத்து வருகிறது. இச்சங்கத்தார் மாதாந்தரப் பத்திரிகையாகிய "இந்தியன் மாகஸினின்" ஏப்பிரல் மாதத்து சஞ்சிகையொன்று நம் முன்னிருக்கிறது. இதிலுள்ள பொருளடக்கங்களில் இந்தியா கவர்னர் ஜெனரலாயிருந்த வாரேன் ஹேஸ்டிங்ஸ் என்பவர் இன்னார் என்பதைப்பற்றி இங்கிலாந்திலுள்ள வித்வான்கள் சிலருக்குள் உண்டான பேதத்தைப்பற்றி மிஸ்டர் பாக்ஸ் என்பவர் எழுதினது முதல் விஷயமாயிருக்கிறது. இரண்டாவது, நமதுதேச பூர்வீக கிரந்தங்களிலிருந்து "லோபியைச் சீர்திருத்தினவழி" யென்று ஒருகதை 'ராயல் ஏஷியாடிக் ஸொஸைடி' யென்னும் வித்வ சங்கத்தாரின் பத்திரிகையிலிருந்தெடுத்துப் பிரசுரிக்கப்பட் டிருக்கிறது. அக்கதையின் சாராம்சம் இது:—

"முன்னொரு காலத்தில் பிரமதத்தன் காசிராஜாவாக அரசாண்டு கொண்டிருக்கையில் அவருடைய பிரதமபொக்கிஷதாரனாக விருந்தவன் இல்லீசன் என்னுமொருவன். இவனுடைய முன்னோர்கள் அவ்வுயர் பதவியிலிருந்து தானதர்மங்கள் தாராளமாகச் செய்து நற்பேரும், கீர்த்தியும் பெற்றிருந்தார்களாயினும், அவர் வமிசத்திலுதித்து அவர் பதவிக்கு வந்த இல்லீசன் என்னும் இவன்மட்டும் மிகலோபியாக விருந்தான். அவன் முன்னோர் கட்டிய தர்ம சத்திரங்களை யெல்லா மிடித்து நாசமாக்கி விட்டு தனது அளவற்ற செல்வத்தில் அரைக்காசும் செலவிடாது, தானு முபயோகிக்காது, குவித்துவந்தான். இப்படி யிருக்கையில் பரமபதமடைந்த அவன் பிதா தேவலோகத்தில் தேவதூதனாக விருக்கையில், தன் பிள்ளை செய்யும் லோபித்தனத்தைக்கண்டு அவனுக்குப்புத்தி புகட்டுவதாகச் சொல்லி அவனைப்போல் உருவெடுத்துக்கொண்டு பூமியில் அவதரித்து, உண்மையான இல்லீசன் தனியிடமொன்றில்குடித்து வெறித்துக் கிடக்கையில் இராஜசமுகத்தின் முன் இல்லீசன்போல் சென்று தன் சொத்துக்களையெல்லாம் ராஜாவை யேற்றுக்கொள்ளும்படி விண்ணப்பம் செய்துகொண்டான். ராஜா தன்பொக்கிஷதாரனைப் பார்த்து உம்மிலும் அதிகமான செல்வம் எம்மிடத்துள்ளதாதலால் உமது எனக்கு வேண்டாமென்று சொல்லிவிட்டார். "அப்படியானல் என் செல்வத்தை எனக்கிஷ்டமானபடி ஏழைஜனங்களுக்கு வாரி விட்டுவிடுவேன், நீர் கேட்கக் கூடாதென்றான்" மாயமாய்வந்த இல்லீசன். அரசன் அப்படியே செய்கவென்னவும், இம்மாய இல்லீசன் தன் மகன் வீட்டுக்குவந்து சேவகர்களைக்கூப்பிட்டு 'என்னைப்போல் யாராவது வேஷம் போட்டுக்கொண்டு இந்தவீடு தன்னதென்று உள்ளே நுழையவந்தால் அவனை அடித்துதைத்துத் துறத்திவிடுங்கள்' என்று கட்டளையிட்டு விட்டு உள்ளேசென்று இல்லீசன் பெண்சாதி பிள்ளைகளையெல்லாம் கூப்பிட்டு என்னிஷ்டப்படி இப்பொருள்களையெல்லாம் வாரிக்கொடுத்து தர்மஞ்செய்யப்போகிறேன் என்றான். அவர்களும் இது அவன் குணக்குகளி லொன்றென்று எண்ணிச் சரியென்றிருந்தார்கள். ஊரில் தண்டோராப்போட்டு ஏழை எளியவர்க ளெல்லாம் வந்து வேண்டிய பொருள்கள்வாரிக்கொண்டுபோகலாமென்று தெரிவித்தான். இப்படி எல்லா ஜனங்களும் வாரிக்கொண்டுபோகையில் ஒருவன் இக்கொடைகளுக்காக இல்லீசனைப் புகழ்ந்துகொண்டுபோன வசனங்கள் எங்கேயோ ஒரு புறத்தில் மயங்கிக்கிடந்த உண்மையான இல்லீசன் காதில்விழ அவன் குடிமயக்கமெல்லாம் உடனே பறந்தோட, தன் ஆஸ்திகளை யெல்லாம் அரசன் கொள்ளை விட்டுவிட்டானென்று எண்ணி அந்த ஆளைப்பிடித்து மடக்கி என் ஆஸ்தியை ஏன் வாரிக் கொண்டு போகிறாயென்று கேட்டான். அதற்கு அவன், இல்லீசன் தன் இல்லத்திலிருந்து வேண்டுமென்று வந்தவர்க்கெல்லாம் தாராளமாக வாரிக் கொடுக்க நீ யாரடா அவன் வந்து வழியை மறுக்கிற

தென்று கொடுத்தான் தவடையில் பலமாக. இப்படி பலபேரிடத்துப் பெரும்பூசை பட்டபின்அவன் சொந்தவீட்டுக்குப் போக அங்கேயும் வாசற்காப்பேர் இவனை யாரோவென்று அடித்துத் துரத்த, அரசனிடம்போய் முறையிட்டுக் கொண்டான். அரசன் இவன் முறைபாட்டைக்கேட்டு சற்று முன்வந்த இல்லீசன் யாரென்று மற்றவனை வருவிக்க, இருவரில் உண்மையான இல்லீசன் இன்னுனென்று காணக் கூடாமல் மயங்கித்தா னென்றும் தீர்ப்புச் சொல்லக்கூடாம லிருப்பதைத் தெரிவித்தான். இல்லீசன் பெண்டுபிள்ளைக ளெல்லாரையும் சாக்ஷி கூற, மாயமாய்வந்த இல்லீசன் அவன்தெய்வத்தன்மையால் உண்மையான இல்லீசனுக்கும் தனக்கும் சிறிதும் வித்தியாச மில்லாதபடி தானே உண்மையான இல்லீசனென்று சிலர் சொல்லுமாறு செய்துகொண்டான். அரசன் இது விஷயத்தில் தான் உதவி செய்ய அசக்தனுயிருப்பதைத் தெரிவிக்கவும் உண்மையான இல்லீசன் தன் பொருளெல்லாம் கொள்ளை போய்விட்டதென்று மூர்ச்சித்துக் கீழே விழ, மாயமான இல்லீசன் வாயுவாகமாறி அரசனுக்குத் தன் உள்ளக் கருத்தை அசரீரிவாக்கால் தெரிவித்து தன் மகனுக்கும் புத்திபுகட்டி அந்திரஸ்தானமானுன். அதுமுதல் இல்லீசன் அவன் லோபகுணத்தைவிட்டு எல்லாருக்கும் தாராளமாய் ஈகையளித்து நல்ல தாதா வென்று பேர்பெற்று வாழ்ந்தான்.'' என்பது கதை.

இதன்றி இந்தியாவைப் பற்றியுள்ள சிலபுஸ்தகங்களைப்பற்றி யெழுதிய அபிப்பிராயக் குறிப்புகளும் இந்தியாவில் வித்தியாபிவிர்த்தி சம்மந்தமான சில விஷயங்களைப் பற்றிச் சில குறிப்புகளும் அப்பத்திரிகையிலடங்கி யிருக்கின்றன.

---

"கிறிஸ்தியன் காலேஜ் மாகஸின்."

சென்னை கிறிஸ்தியன் காலேஜ் பண்டிதர்களால் நடத்தப்பட்டுவரும் இம்மாதாந்தரப் பத்திரிகையின் ஏப்பிரல் சஞ்சிகையில் மா-ா-ஸ்ரீ வி. வெங்கையா எம். ஏ. அவர்கள் நமது நாட்டில் அங்கங்கேயுள்ளபூர்வீககட்டடங்கள், கோவில்கள்முதலான வற்றில் திரவிடபாஷையிலும் சமஸ்கிருதத்திலும் வெட்டப்பட்டிருக்கக் காணப்படும் பூர்வீக சிலாசாஸனங்களைக் குறித்துத் தொடர்ச்சியாக எழுதி வரும் விஷயம் வாசிக்க இனிமையானதும், நமது முக்கியஸ்தலங்கள் பலவற்றைக் குறித்துப் பூர்வீகமாயுள்ள சில விஷயங்களைத் தெள்ளிதாக வெடுத்துப் போதிப்பதாகவுமிருக்கிறது. அந்த சஞ்சிகையிலே பண்டிதர் எஸ். எம். நடேசசாஸ்திரியாரவர்கள் நீலகிரிஜில்லாவிலுள்ள 'வடுகர்' என்னும் பூர்வீகஜாதியாரைப்பற்றி எழுதுகிருர். இவர்கள்வடகோயமுத்தூர் மைசூர் இந்தப் பாகங்களிலிருந்து வந்ததால் 'வடகர்', 'வடுகர்' என்று பேர்வந்ததாகத் தெரிகிறது. பண்டித நடேசசாஸ்திரியார் அவ்'வடுகர்' நீலகிரி ஜில்லாவில் குடியேறின விவர முதற்கொண்டு அவர்கள் ஜாதி, யேற்பாடு, கட்டுப்பாடு, மற்ற ஆசார வழக்கங்கள், விசேஷகுணங்கள், நடை, உடை பாவனைகள் இவற்றைப் பற்றி விசாரித்து, விவரமறிந்து எழுதி யிருக்கிருர். இத்தேசத்திலுள்ள பல ஜாதிகளின் வழக்க விசேஷங்களைத் தெரிய விரும்புவோர்க்கு 'வடுகர்' ஜாதியைப்பற்றி இவர் எழுதி யிருக்கும் விஷயங்கள் வாசிக்க மிகப் பிரியம் தருவதாயிருக்கும்.

---

**சில முக்கியப் பிரமாணங்கள்:**—திருவாங்கூர் ஹைகோர்ட் வக்கீல் ம-ா-ா-ஸ்ரீ சேஷய்யங்கார் அவர்கள் பின்வருமாறு எழுதுகிருர்:—

1. ஒருவன் அதி புத்திமானு யிருக்கலாம். ஆனுல் அவனுடைய சதாசாரப் பிரவர்த்தி விர்த்திசெய்யப்படாத பட்சம் அவனுடைய ஜீவிதம் பயங்கரமான பருஜெயமாக்கும். பைரன், லான்டர் என்னும் கவிகளைப்போல் அவன் ஆபத் பிரயோசனமாய் ஆகாச தீபம்போல் உபயுக்தனு யிருந்தானென்ருலும் ஒருகாரியம் அவசியமுண்டு. அது பணமோ, தேகசக்தியோ, சாமர்த்தியமோ, யசஸோ, சுவாதந்திரியமோ, அரோகதையோ? அல்ல; நல்ல நடத்தையாக்கும்.

2. பக்தியிலிருந்து சதாசாரத்தை வேறு பிரிக்கிறதற்குக் கூடாது. சதாசார வாக்கியங்களை நிஷ்டையோடு அனுசரித்து நடக்கிறவர்க்கு ஜீவிதத்தை விவரிக்கக் கழியாது ஜீவிதம் சக்தியை ஜெனிப்பிக்கிற விவேக மாக்கும். அது ஈசுவரனுடைய பரியாய பதமாக்கும். அதி விசிஷ்டமான சதாசாரத்தினுடைய உற்பத்தி ஸ்தானத்தை போஷிப்பிக்கிறது ஈசுவரனுக்கும்.

3. பாலர்கள் கிரகிக்கிறதற்கு அதிகம் கொதிப்போடு கூடியிருக்க வேண்டிய சில குணங்களை விவரிக்கலாம்.

4. அனுசரிப்பு—ஒருஜெனக்கூட்டத்தில் நல்ல ஸமாசிகனுயிருக்க வேண்டுமென்று ஆக்கிரக முள்ளவன் அனுசரிக்கிறதற்குப் படிக்கவேண்டும்.

5. சத்தியவாதி—பாலர்கள் சுபாவத்தினுலே சத்தியவாதிகளாக்கும். ஆனுல் அவர்: 1. சோம்பலினுலும், 2. விரதாடம்பரத்தினுலும், 3. பயத்தினுலும், பொய் சொல்லுகிறதற்கு இடம்வருகிறது. சதாசார தீரதை அதிகம் அபூர்வமா யிருக்கிறது. ஆனுல் அது ஜனஸமுதாயத்திற்கு வேண்டும் குணங்களில் அத்தியந்தம் புருஷயோக்கியமாயிருக்கிறது.

6. ஒருக்ஷணமும் சோம்பலாயிருக்கக் கூடாது; காலம் க்ஷணஸ்தை ஆகையால் உடன் உடன் செய்யவேண்டியதை செய்து தீர்க்கவேண்டும்.

7. ஸங்கோசத்தை தகிக்கவேண்டும். விசாலமான ஸகா அனுபோகம்வேண்டும்.

8. அதிசயிக்கத் தக்கதாய் ஒன்றுமில்லை யென்றுள்ள தூஷண சுபாவத்தை ஸர்வபரித்தியாகம் செய்யவேண்டும்; அதனுல் பூசிக்கிறதற்கு படிக்க வேண்டும்.

9. எதிலும் மிதமாயிருக்க பரிச்சியம் செய்ய வேண்டும்.

10. மனுஷனுடைய மகத்வம் அவனிடத்திலிருக்கிற ஸ்திதியை அவலம்பித்திருக்கிறது. அதனுல் தன்சம்பாத்தியத்திற்குமட்டும்மனசுவைக்கக்கூடாது.

11. பரிச்சிரம சுபாவம் வேண்டும். ஆதிப்பிரவர்த்தியில்தானே விக்னம் வருகிறதென்று எண்ணி புத்திமான்கள் ஒரு பிரவர்த்தியிலிருந்து திரும்பிவிட்டு விடலாகாது.

# சிறுவர்க்கானபக்கம்.

[விவேக சிந்தாமணியை வாசிக்கும் சிறுவர் சிறுமிகளுக்காக எழுதப்பட்டது.]

இப்பக்கம் சிறுவருபயோகத்துக்காக வென்று தனியாக வைக்கப்பட்டுள்ள தென்பது இப்பக்கத்தில் மேலேயெழுதப்பட்டிருக்கும் தலைப்பெயரைப் பார்க்கத் தெரியும். நம்மையாளும் வெள்ளைக்காரர்கள் தேசமாகிய இங்கிலாந்து என்று சொல்லப்படும் சீமையிலே ஒவ்வொரு குடும்பத்தாரும் ஒன்று அல்லது பல பத்திரிகைகள் வாங்கி வாசிப்பார்கள். ஒவ்வொரு வீட்டிலும் குடும்பத்திலுள்ளவர்க ளெல்லாம் ஒருமிக்க உட்கார்ந்து சந்தோஷமாகச் சாப்பிடும்பொழுது மனோவிர்த்திக்குக் காரணமான பத்திரிகைகளை வாசித்து உலகவிவகாரங்களில் அவர்கள் அறிவை யதிகமாக விர்த்திசெய்து கொள்வார்கள். வீட்டில் மூத்தோர் பலரும் பத்திரிகையைவாசித்து அதைப்பற்றிப் பேசிக் கொண்டிருக்கும்பொழுது சிறு பிள்ளைகளும் அவர்களைப்பார்த்து தாங்களும் அதை வாசித்து தங்களுக்குத்தெரிந்தவற்றைப் பேசவேண்டுமென்று ஆசைப்படுவது குழந்தைகளுக்கு சுபாவமே. மேலும் அத்தேசத்துப் பெற்றோர்கள் தங்கள் குழந்தைகள் தேகபோஷணையைக் கவனிப்பதுபோல் அவர்களின் மனோவிர்த்தி விஷயங்களையும் தாங்களே நேரில் கவனிப்பது தங்கள் கடமையென்று உணர்ந்து அந்தப்படி நடப்பவர்கள். இது காரணங்கள் பற்றி அத்தேசத்துப் பத்திரிகைகள் பலவற்றிலும் குழந்தைகளுக்கு உபயோகமான விஷயங்களைப்பற்றிப் பேசத் தனியாக இரண்டொருபக்கம் விட்டு வைப்பது வழக்கம். இந்த விவேகசிந்தாமணிப் பத்திரிகை அறிவைப் பரவச்செய்வதற்கென்று ஏற்பட்டதால் இதிலும் அந்தமாதிரி சிறுவர்க்குபயோகமான விஷயங்களைப்பற்றி எழுத இரண்டொருபக்கம் விட்டு வரவேண்டுமென்று மாயாண்டி யாகிய நான் பத்திராதிபரை மன்றாடிக் கேட்டுக் கொண்டேன். அவர் இவ்வேற்பாடு நல்லதுதானென்று சொல்லி இதற்காக இரண்டொருபக்கம் தனியாக விட்டுவருவதாகச் சொன்னதோடு, அதற்கு வேண்டியவிஷயங்களைப் பார்த்துத் திரட்டிப் பதிப்பிக்கும்வேலையையும் எனக்கே அளிப்பதாகச் சொன்னார். நான் மாயாண்டி என்று வெளிவந்தது முதலில் அறிவைப் பரவச் செய்யும் விஷயமாகவே யாதலால், இன்று குழந்தைகளாயிருந்து நாளைக்குப் பெரியவர்களாகி நமது தேசத்தை முன்னுக்குக் கொண்டுவரத் தக்கவர்களான சிறுவர்களுக்கு பத்திரிகை வாசிப்பதில் உற்சாகம் பிறக்கும்படி அவர்களுக்கு உபயோகமான விஷயங்களை எனக்குத்தெரிந்த மட்டும் தக்கவர்களைக்கொண்டு திரட்டி வெளியிடுவதைவிட அதிக சந்தோஷம் தரத்தக்க வேலை வேறு என்னவிருக்கிறது? ஆகையால் பத்திராதிபருக்கு வந்தனம்சொல்லி இப்பக்கத்தைச் சீர்படுத்திப் பதிப்பிக்கும் என்வேலையை ஒப்புக்கொண்டேன். இந்தத்தடவை பத்திராதிபர் எனக்குப் போதுமான அவகாசம் கொடுக்காமையால் என்விருப்பப்படி இப்பக்கத்தைச் சித்திரப்படுத்திப் பதிப்பிக்கக் கூடவில்லை. ஆனாலும் என் கடமையில் பின்வாங்கக் கூடாதென்று சிறுவர்களுக்கு உபயோகமானதாக நான் வாசித்துச் சேகரித்த சிலவிஷயங்களைக் கீழே பதிப்பிக்கிறேன். இப்பக்கத்தை வாசிக்கும் சிறுவர் சிறுமியர் இதில் கண்ட விஷயங்களைப் பற்றி எழுதவேண்டுமானால் விவேக சிந்தாமணி ஆபீஸில் மாயாண்டிக்குக் கொடுப்பது என்று எழுதினால் எனக்கு வந்து சேரும். இப்பத்திரிகையை வாங்கும் பெரியோர் இப்பக்கமிருப்பதைச் சிறுவர்க்குக்காட்டி இதை வாசிக்க அனேகம் சிறு தோழர்களை எனக்குச் சேர்த்துக் கொடுப்பார்களென்று கோருகிறேன். இந்த முறை நான் முதல் முதல் என் சிறு தோழர்களுக்கென்று பொறுக்கி யெடுத்த விஷயம்:—

### "சுத்தம்."

"சுத்தம் கெட்டவள் சுகம் கெட்டவள்," "சுத்தியுள்ளவள் பத்தியுள்ளவள்" என்னும் வாக்கியங்கள் நமது நாட்டார் அறியவேண்டிய

நன் மொழிகள். இவைகளைச் சவனித்து இவற்றின்படியே நடப்பவரோ வெகு சொற்பம் என்று விசனத்துடனே அறிக்கையிடுகிறேன். அநேகர் சுத்தம் இன்னதென்று அறிந்திருந்தும், அசுத்தத்தை அணுவாகிலும் தங்களைவிட்டு அகற்றாதிருக்கிறார்கள். சிலர் வெளிக்குச் சுத்தமாயும் உள்ளே அசுத்தமாயும் இருக்கிறார்கள். சுத்தம் பலவிதம்.

"சுத்தத்திலெல்லாம் முந்தின சுத்தம் சரீர சுத்தம். இவ்வகைப்பட்ட சுத்தமே சரீர சுகத்துக்கு அவசியம் வேண்டியது. சில நாளாக நமது உடம்பைக் கழுவாமலும், துணியைத் துவைக்காமலும் இருப்போமேயாகில், நம்மேல் வீசும் துர்நாற்றம் எவ்வளவு பரிமளமாயிருக்கும் என்று எளிதில் அனுமானித்துக் கொள்ளலாம். இப்படிப்பட்ட ஊத்தை மக்கள் தங்கள் உடம்பைக்கெடுப்பதுமன்றி, தாங்கள் இருக்கும் வீட்டையும் குப்பையினாலும் கூளத்தினாலும் நிரப்பிவைக்கிறார்கள். அதினால் விஷக்காற்று எங்கும் வீசி, ஊரிலே அம்மை வாந்திபேதி முதலிய தொத்து வியாதிகள் உண்டாவதற்கு இடம் உண்டாகிறது. இப்படியாகச் சரீரத்தைச் சுத்தமாய் வைக்காதவர்கள் தங்கள் வீட்டுக்கும் நாட்டுக்கும் பெரும் கஷ்டத்தை வருவிக்கும் பாதகராயிருக்கிறார்கள். சரீர சுத்தத்தோடு சம்பந்தமானது சுத்தவஸ்திரம்உடுக்குதல். சிலர் சுத்த வஸ்திரம் உடுக்காததற்கு எளிமையை விசேஷித்த காரணமாக எடுத்துரைக்கிறார்கள். "சுத்தமாயிருக்கவேண்டும், சுகமாயிருக்கவேண்டும் என்று கையில் பொருளுடைய கனவான்கள் வெகு இலேசாய்ச் சொல்லிவிடலாம், கஞ்சிக்குக் காற்றாய்ப் பறக்கிற எங்களுக்கு அல்லவோசுத்தமாயிருப்பதின் வருத்தம் தெரியும்" என்று எளியோர் எதிர்த்து வாதாடுவார்கள். இவர்கள் "கந்தையானாலும் கசக்கி உடு, கூழானாலும் குளித்துக்குடி" என்னும் பெரியோர் வாக்கை மறந்து பேசும் வம்பர்களாயிருக்கிறார்கள். எளிமை அசுசிக்குக் காரணமல்ல. நாம் உடுப்பது கிழிந்தவஸ்திரமாயிருந்தாலும், சிறு கந்தையாயிருந்தாலும் அதைத் துவைத்துச் சுத்தமாக உடுத்திக் கொள்ளலாம். வேறு சிலர் தலையில் ஏராளமான பேன்களும், உடலில் ஆள்பாரம் அழுக்கும் சேர்த்த பின், "அரைப்பிள்ளைப்பானையில் ஆழாக்கு வெந்நீர்வைத்து, அங்கையால் அள்ளி அப்படியும் இப்படியும் ஊற்றி" காலில் இரண்டு தேய்ப்பும் முகத்தில் இரண்டு தேய்ப்புமாக உடல்முழுவதையும் அலம்பிவிடும் அழும்பரா யிருக்கிறார்கள். இப்படிப்பட்டவர்களைப் போல் இதை வாசிக்கும் எனது சிறுதோழர் தோழிகளில் எவரும் இருக்கமாட்டார்கள் என்று எண்ணுகிறேன். நாம் உண்கிற உணவும் குடிக்கிற கூழும் நமது உடலிலே ஒட்டவேண்டுமானால் நம்மிடம் முந்த முந்த காணப்படவேண்டியது சுத்தமே. மேலும் நமதுஉடலை எப்போதும் சுத்தமாய் வைத்திருந்தால், எண்ணி முடியாத நோய்களுக்கு இடம்இராது. இவற்றையெல்லாம் எனது நேசச் சிறுவர்கள் சீர்தூக்கிப் பார்த்து எப்போதும் சுத்தமாயிருக்க முயலுவார்களென்று நம்புகின்றேன்"

"கொடும்புலி."

நான் சில தினங்கள்முன் பலபத்திரிகைகளை வாசித்துக்கொண் டிருந்தேன். அப்பொழுது ஒன்றில் கொடும்புலி எனத் தலைப்பெயரிட்ட கடிதமொன்றைப் பார்த்து வாசித்தேன். அதில் காட்டில் வசிக்கும் கொடும்புலியைத் தவிர மனிதர்களிலும் கொடும்புலிகளுண்டென்று சொல்லி யிருந்ததைப் பார்த்து அவர்கள் யாரோ அப்படிப்பட்ட ஜீவனைபார்க்க அதிசயமாயிருக்குமென்று மிகஆவலோடு மேலே வாசித்து அப்புலிகளைத் தேடிக்கொண்டு போனேன். போகவே, நான் கண்டுபிடித்த கொடும்புலிகள் என்னவாக விருந்தன தெரியுமோ? உங்களுக்கு இன்னும் தெரியாவிட்டால் கீழே வாசியுங்கள்:—

"சண்டைக்காரி ஒரு கொடும்புலி. இவள் யாரைக் கண்டாலும் சினந்து பார்ப்பாள், அதட்டிப் பேசுவாள், நாய்போல் குரைப்பாள், புலிபோல் பாய்வாள். இவளைக் கண்டால், பெரியோருக்கும் பயம், பிள்ளைகளுக்கும் பயம், மனிதருக்கும் பயம், மிருகங்களுக்கும் பயம். இவளால் அண்டைவீட்டாருக்குச் சஞ்சலம், அடுத்த வீட்டாருக்கு நடுக்கம், எதிர்த்த வீட்டாருக்கு இடி. இவள் மனிதர் அண்டாதமனைக் குரங்கு, ஒற்றைக்காட்டு ஓரி, பாழுங்காட்டுப் பல்லி."

எனது சின்னஞ் சிறு தோழிகளே இப்பேர்ப்பட்டவளைப்பற்றி என்ன நினைக்கிறீர்கள்? மனுஷப்புலியில் இது மிகவும் பயங்கரமான ஒரு கொடும்புலிதானே. உங்களில் யாராவது சண்டைபோடும் குணமுள்ளவர்களாக விருந்தால் உங்களைப்பற்றி பிறர் இப்படிச் சொல்லி நடுங்குவது உங்களுக்கு என்னமாயிருக்குமென்று நன்றாக யோசித்துப்பாருங்கள். பெண்கள் எப்படியிருக்க வேண்டு மென்பீர்களோ? கீழேவாசியுங்கள்:—

“பெண்களுக்கு அழகு சாந்தம். பார்வையில் சாந்தமும் வாக்கில் சாந்தமுமாய் இருப்பவளே பெண். இவள் புருஷன் எத்தனை கோபக்காரனாயிருந்தாலும், இவளது முகத்தைப் பார்த்தவுடனே பெட்டிப் பாம்புபோல்அடங்கிவிடுவான். இவளது அமர்ந்த மொழியைக்கேட்டவுடனே அவனுடைய அகங்காரம் எல்லாம் ஆனந்தமாய் மாறிவிடும், அவனுடைய ஆதுரமெல்லாம் மாதுரியமாகி விடும்.”

இன்னொரு கொடும்புலி யாரென்று பார்க்கையில்

“சண்டைக்காரிக்கு அக்காள் சமுசயக்காரி. இவள் கொடுமை புலிக்கொடுமைக்கு மேல். அவளுக்கு யாவர் பேரிலும் சமுசயம். தான் கட்டியிருக்கும் வஸ்திரத்தின் பேரிலும் அவளுக்குச் சந்தேகம் பிறப்பதுண்டு. அவள் தான்கண்ட பேருக்கெல்லாம் களவாணிப் பட்டம் கட்டுவாள். ஆணுக்குப் பெண்ணும்,பெண்ணுக்கு ஆணும் சோடுகட்டிப் பேசுவதே அந்த மூர்க்க மங்கையின் முக்கிய அணிகலம். இத்துர்க்குணம் பிடித்த மாதரிடத்தில் வாழ்வு தரிகொள்ளுமா? அவர்கள் இருக்கும் வீடு ஈடேறுமா? அங்கேசீர்கேடும்தாறுமாறும் வளர்ந்தேறுமேயன்றி வேறல்ல.”

என்று வாசித்தேன். இதற்கு ஒருதாரணம் சொல்லி இதை யெழுதியவர் இப்படிப்பட்ட “சமுசயக் காரிகள் வீட்டில் வாழுவதிலும் கொடும்புலி வாழும் காட்டிலே சாவது உத்தமம்” என்கிற முடிவுக்கு வந்ததைக்கண்டேன். இதுவும் வாஸ்தவமேயென்று நினைத்துக் கொண்டு மூன்றாவது கொடும்புலி யாரென்று பார்க்க அது கோபக்காரி யென்று கண்டேன். அவளைப்பற்றி நான் படித்ததைக் கீழே வரைகிறேன்; நன்றாகவாசித்துப் பாருங்கள்:—

“கோபக்காரி ஒருகொடும்புலி; கோபத்திலே அவள் செய்கிறதின்னதென்றும் அறியாள்; பேசுவதின்னதென்றும் அறியாள்; கடைசியாக தான்கொண்ட கணவனையும் தனது கொடிய கோபத்தினால் கொன்றுபோடுவாள். அவளைப் பார்ப்போர் யாவரும் ‘அடா, அப்பா,யாவருக்கும் அடங்காத பெரும்பிடாரி வருகிறது’ என்று பயந்து ஓடுவார்கள். இப்படிப்பட்ட பெண்கள் இருக்கும் வீட்டில் உண்டாகும் பணநஷ்டத்துக்கும் கனநஷ்டத்துக்கும், காலநஷ்டத்துக்கும், வேலை நஷ்டத்துக்கும்கணக்குமில்லை, வழக்கு மில்லை. புருஷரை எதிர்த்துப் பேசி, எப்போதும் சண்டைசெய்யும் சாந்தமற்ற பெண்களைக் குறித்து

“எறியென் றெதிர்நிற்பாள் கூற்றம் சிறுகாலை
அட்டில் புகாதாள் அரும்பிணி—அட்டதனை
உண்டி யுதவாதாள் இல்வாழ்பேய் இம்மூவர்
கொண்டானைக் கொல்லும் படை”

என்று சொல்லப்பட்டிருக்கிறது.கோபம்பிறந்தபின் அதைத் தொலைப்பதைப்பார்க்கிலும், கோபம் வருமுன் அதைத் தடுப்பதுபுத்தி.“பூவைக் கிள்ளிவிட்டால் காயில்லை, கனியில்லை. கோபத்தைத் தொலைத்தால் ஏச்சில்லை, பேச்சில்லை, குத்தில்லை, வெட்டில்லை. கனத்துக்கும் மோசமில்லை, பணத்துக்கும்மோசமில்லை. சினந்தாப்போல் அறுத்த மூக்கு சிரித்தாப்போலே ஒட்டாது. முனிந்தாப்போலே இடித்தவிடு குளிர்ந்தாப்போலே எழும்பாது. ஆகையால் பெண்கள் கோபத்தைத் தொலைத்துப் பொறுமையைப் பூண்டுகொள்வது நன்மை.”

கடைசியில்: “இத்தேசப் பெண்களைக் கொடும்புலிகளாக்கும் காரணங்கள் பல. அவற்றுள் முக்கியமானவை இரண்டு: அறிவீனமும் அஞ்ஞானமுந்தான். கல்விகற்றுப் புத்தி தெளிவடைந்தோர் தங்களைச் சீர்படுத்திக்கொள்ளும் வழிக்குள்ளாவார்.”—என்றுசொல்லி முடிவு கட்டி யிருந்தது. இவையெல்லாம் வாஸ்தவமே. இங்கேசொன்ன குற்றங்களெல்லாம்புருஷர்களுக்கும் ஆகாதவையே. பெண்களுக்குப் பெண் புத்தி சொல்லி யெழுதியிருந்ததைப்பார்த்துநான் அப்படியே எடுத்துரைத்தேன். இதை வாசிக்கும் சிறுவர் சிறுமிகள் இவ்விஷயங்களை மனதில் வைத்து தங்களிடத்தில் கெட்டதாயுள்ளதை யாராய்ந்து நீக்கி நல்லதாயுள்ளதையறிந்துகைப்பற்றி தங்கள் குணத்தையும நடத்தையையும் சீர்திருத்திக்கொண்டு வருவார்களென்று நம்புகிறேன்.

மாயாண்டி.



## அறிவைப் பரவச்செய்வதற்கான ஏற்பாடு.

1. சென்னை, திருவல்லிக்கேணியில் தபாலாபீசுக்கு அருகில் மார்ச்சுமீ 1 உ யிலிருந்து அறிவைப் பரவச்செய்யும் ஏஜன்ஸி அல்லது காரிய விசாரணைச்சங்கம் என்று ஒருசபை ஏற்படுத்தியிருக்கிறோம். சுருக்கமாகத் தமிழில் அதற்கு "அறிவைப் பரவச்செய்யும் சபை" என்று பெயர் கொடுத்திருக்கிறோம்.

2. இச்சபையின் நோக்கங்கள்:—

(i) நாட்டுப்புறங்களில் பத்திரிகைகளைப் பரவச்செய்து அதுமூலமாக ஜனங்களுக்குப் படிப்பில் பிரியமுண்டாகும்படி செய்யவேண்டுமென்பதும்,

(ii) கிராமாந்திரங்களிலுள்ள ஜனங்கள் படிப்பதில் பிரியம்வைத்து பத்திரிகைகளையும் சிறுபுஸ்தகங்களையும் வாசிக்க ஆவல் கொண்டபின் அவைகள் சுலபமான விலைக்கு அவர்களுக்குக் கிடைக்கும்படி செய்து, பத்திரிகைகளாலும் சிறுபுஸ்தகங்களாலும் ஜனங்களுக்கு அறிவையூட்டி, விவேகத்தை விசாலிக்கச்செய்து, பொதுவிஷயங்களில் அவர்களுக்கு அக்கறை யுண்டுபண்ண வேண்டுமென்பதும்,

(iii) இன்னும் பலவிதத்திலும் கிராமாந்திரஜனங்கள் நிலமையை அவர்கள் சொந்தமுயற்சியால் விருத்திக்குக் கொண்டுவர என்னஎன்ன வழி வகைகளுண்டோ அவைகளையெல்லாம் தேடவேண்டுமென்பதும், ஆகிய இவையே.

3. இந்நோக்கங்களை நிறைவேற்ற,

(i) விவேகசிந்தாமணி யென்று அறிவைப் பரவச்செய்வதற்கான மாதாந்தரத் தமிழ்ப் பத்திரிகையொன்று பிரசுரித்து வரப்படும்.

(ii) சென்னையிலுள்ள அறிவைப் பரவச்செய்யும் சபை (ஏஜன்ஸி) சம்மந்தமாக நாட்டுப்புறங்களிலுள்ள ஒவ்வொரு சிறு பட்டினம், கிராமங்களிலும் அறிவைப் பரவச்செய்யும் விஷயத்தில் ஆசைவைத்து ஊருக்குபகாரமாக அவரவர்கள் சத்தியானுசாரம் கஷ்டப்பட்டுழைக்க இஷ்டமுள்ளவர்களெல்லாரையும் ஒன்றுசேர்த்து, புண்ணியம் தரும் இப்பொதுவிஷயத்தில் அவர்கள் ஊக்கம் வைத்துழைக்கும்படி உற்சாகமூட்டிவர உபகாரசங்கம் என்று ஒரு சங்கம் ஏப்பிரல்மாசம் முதல் ஏற்படுத்தப்படும்.

(iii) இச்சங்கத்துக்கு மெம்பர்களாக விருப்பவர்களெல்லாரும் ஊருக்குழைத்து உபகாரம்செய்ய இஷ்டமுள்ளவர்களென்று தாமாக வலுவில்வந்துழைத்து அதற்காக ஏற்படும் ஒரு கட்டுப்பாட்டுக்குள்ளடங்கி யுழைப்பவர்களாக விருப்பார்களாதலால் அவர்களெல்லாரும் உபகாரிகள் என்று அழைக்கப்படுவார்கள்.

[அறிவைப் பரவச்செய்யும் விஷயத்தில் இஷ்டப்பட்டுழைக்கச் சம்மதமுள்ளவர்களாக அவர்கள் பேரை ரிஜிஸ்தர் செய்துகொண்டவர்களெல்லாரும் இச்சங்கத்துக்கு முதல்மெம்பர்களாக எடுத்துக் கொண்டு அவர்கள் பேர் நமது உபகாரிகள் ரிஜிஸ்தர் புஸ்தகத்தில் பதிந்துகொள்ளப்பட்டிருக்கிறது. இன்னும் உபகாரிகளாகச் சேர விரும்புகிறவர்களும் அவர்கள் பேர்களைச் சீக்கிரத்தில் எழுதித் தெரிவித்தால் அறிவைப் பரவச்செய்வதற்கான பத்திரிகை வெளியாகுமுன் அவர்கள் பேரும் நமது புஸ்தகத்தில் ரிஜிஸ்தர் செய்து கொள்ளப்பட்டு, புண்ணியம்தரும் இப்பொதுவிஷயத்தில் ஆதிமுதல்சேர்ந்துழைக்கும் அபூர்வ கௌரவம் பெறுவாரவர்கள்.]

4. இவ் வுபகாரசங்கத்துக்கு நாடு நகர் எங்குமுள்ள கிராமங்கள் சிறு பட்டினங்கள் எல்லாவற்றிலும் உபகாரிகள் இருக்கவேண்டும்.

5. உபகாரிகளாக இருப்பவர்கள்,

(i) அறிவின்பயனையறிந்து அதையடையப் பேராவா உள்ளவர்களாக விருக்க வேண்டும்.

(ii) தாம் அறிவையடைய ஆவலாயிருப்பதோடு தாமறிந்தமட்டில் அவ்வறிவைத் தம்மைச் சுற்றியுள்ளாரிடம் பரவச்செய்யவேண்டுமென்கிறநல்லெண்ணமும், அவ்வெண்ணத்தை நிறைவேற்றுவதற்கு வேண்டிய உபகார சிந்தையுமுடையவர்களாக விருக்க வேண்டும்.

(iii) பொதுவிஷயத்தில் பாடுபட்டுழைக்கப்பூர்ண சிந்தையுடையவர்களாக விருக்கவேண்டும்.

(iv) அவரவர்களிருக்குமிடங்களிலுள்ள ஜனங்கள் சோம்பேறிக்கூட்டங்கள் போட்டு வீண்வம்புகள் பேசுவதில் விருதா காலக்ஷேபம் செய்வதைத் தடுத்து, ஒழிந்த வேளைகளில் 10 - பேர் ஒன்றுகூடி ஊருக்குபயோகமான விஷயங்களைப் பற்றிப்பேசி, பொது விஷயங்களில் அறிவையூட்டித் தங்களுக்குள்ள விவேகத்தை விசாலிக்கச்செய்யும் உபயோகமான பத்திரிகைகள், புஸ்தகங்கள் இவற்றை வாசிக்கும்படியான சத்காலக்ஷேபம் செய்யும்படி தூண்டப் பின்னடையாது பிரயாசைப் படுகிறவர்களாகவிருக்க வேண்டும்.

[ஜனங்கள் மனதைக் கொஞ்சம் கொஞ்சமாக இப்படிச் சத்விஷயங்களில் பிரவேசிக்கச் செய்யத் திருப்பிவந்தால், நாளடைவில் 10-ப்பேர் ஒத்து வருகிறவர்களைக்கொண்டு ஒழுங்கான ஒருசபை ஏற்படுத்தி அதில் பத்திரிகைகளைத் தருவித்து வாசிப்பதோடு, கிராம க்ஷேமத்துக்குதவியான பொதுவிஷயங்களைப்பற்றிப் பேசி, பொதுவான குறைகளை நிவர்த்திசெய்துகொள்ள வழிதேடி வரலாம்.]

அறிவைப்பரவச்செய்வதற்கென்று நாம்பிரத்தியேகமாக வெளிக்கொண்டுவந்திருக்கும் இவ் விவேகசிந்தாமணியென்னும்பத்திரிகைநிலைபெறுவதற்கு வேண்டிய முயற்சிகளைச் செய்து முடித்து, நாட்டுப்புறங்களிலுள்ள பட்டினங்கள், கிராமங்கள் எல்லாவற்றிலுமிருந்து வேண்டிய உபகாரிகளும்முன்வந்து அவர்கள் பேரை ரிஜிஸ்தர் செய்து கொள்வார்களானால், அவர்கள் கிராமப் பொதுவிஷயங்களுக்குழைக்கும் வழியின்னதினியதென்று எடுத்துக்காட்டி, நமதுஜன சிரேஷ்டர் பலரோடும் நேரிற்பேசி யோஜித்து, அப்போதப்போது ஆகவேண்டிய காரியங்களைப்பற்றி நம் பத்திரிகை வாயிலாக விவரங்கூறி, புத்திபுகட்டி வருவோம்.